# தமிழன் -
# வாழ்வும் வரலாறும்

- தமிழ்த் தேசிய அரசியலுக்கான ஒரு முன்னுரை -

ஞானி

**"நிகழ்"**
**123, காளீசுவரர் நகர்,**
**கோயமுத்தூர் - 641 009**

| | | |
|---|---|---|
| நூல் | : | தமிழன் – வாழ்வும் வரலாறும் |
| ஆசிரியர் | : | ஞானி |
| உரிமை | : | கட்டுரையாளர் |
| முதற்பதிப்பு | : | டிசம்பர் 1999 |
| வெளியீடு | : | நிகழ்<br>123, காளீசுவரர் நகர்,<br>கோயமுத்தூர் – 641 009. |
| அச்சாக்கம் | : | ஜி.எம்.சிஸ்டம்ஸ்<br>10வது வீதி, காந்திபுரம்,<br>கோயமுத்தூர் – 641 012. |
| விலை | : | ரூ. 25/– |

## முன்னுரை

உழைக்கும் மக்களின் விடுதலை இயக்க இதழாகிய இலட்சியப் போராளியில் 98 சூலை முதற்கொண்டு 'எந்த முகத்தோடு இன்றையத் தமிழர்?' என்ற பொதுத்தலைப்பின் கீழ் தொடர்ந்து எனது பனிரெண்டு கட்டுரைகள் வெளிவந்தன. தமிழ்த்தேசியமென்ற அரசியலை கருத்தியல் ரீதியாக முன்னெடுத்துச் செல்லும் நோக்கில் இக்கட்டுரைகள் எழுதப்பட்டன. திரும்பிப் பார்க்கிறபோது, இக்கட்டுரைத் தொடருக்கு தமிழன் வாழ்வும் வரலாறும் என்று பெயரிடுவதுதான் பொருத்தமென்று தோன்றுகிறது.

தமிழனின் நெடுங்கால வரலாற்றை ஆராய்வது என் நோக்கமன்று. அதற்கான தகுதி எனக்கில்லை. தமிழனின் இன்றைய வாழ்வு நமக்குள் பெரும் வருத்தத்தை ஏற்படுத்துகிறது. உலகளவில் பெருகிவரும் நெருக்கடிகளுக்கிடையில் தமிழன் நொறுங்கிக் கொண்டிருக்கிறான். வரலாற்றிற்குள்ளிருந்து இவனை, இவனது ஆற்றல்களைத் திரட்ட வேண்டும். வரலாறு நெடுகிலும் இவனுக்குள் செயல்பட்ட மெய்யியலைத் திரட்டவேண்டும். தமிழன் தன்னை உணர்ந்து, தன்னைத் திரட்டிக் கொண்டு, கடுமையான போராட்டத்தில் ஈடுபட்டாலொழிய இவனுக்கு விடுதலையில்லை. வரலாற்றில் இடமில்லை. அண்மையில் உருவாகிவரும்

தமிழ்த்தேசியமென்ற அரசியலின் இலக்கு இதுவாகத்தான் இருக்க முடியும். இத்தகைய அரசியலுக்கான ஒரு முன்னுரைதான் இந்த நூல்.

தமிழ்த்தேசியம் குறித்த இன்று பல்வேறு அமைப்புக்கள் தமிழகத்தில் செயல்படுகின்றன. தமக்கிடையிலுள்ள கருத்து வேறுபாடுகளை இவர்கள் களைந்து கொள்ளும் முறையில் தமக்குள் விவாதிப்பது இல்லை. தமிழ்த்தேசியத்திற்கெதிரான சக்திகள் தொடர்ந்து வலுப்பட்டுவரும் நிலையில், தமிழ்த்தேசிய உணர்வாளர்கள் தமக்குள் உள்ள கருத்துவேறுபாடுகள் முதலியவற்றை கலைந்து கொண்டு ஒன்றுபட்டாலொழிய வரலாற்றில் முன் நகர இயலாது. இத்தகைய வேண்டுகோளுடன் இந்தச் சிறுநூல் வெளிவருகிறது.

தமிழகத்திலுள்ள தமிழினத் தலைவர்கள் மற்றும் அறிஞர்கள் பலரை கோவைக்கு அழைத்து அவர்களின் உரைகளைப் பதிவு செய்து 'தமிழ்த்தேசியம் – பேருரைகள்' என்ற நூலை நண்பர்களின் ஒத்துழைப்போடு நாங்கள் வெளியிட்டோம். இந்த நூலைத் தொடர்ந்து 'இந்தியாவில் தேசிய இனச் சிக்கலும், தமிழ்த்தேசியமும்' என்ற அரிய நூல் ஒன்றை அறிஞர் கு.ச. ஆனந்தன் அவர்கள் வெளியிட்டார். தொடர்ந்து தமிழ்த்தேசிய இயக்கத்தினரின் கட்டுரைகள் பல்வேறு இதழ்களில் வெளிவருகின்றன. இவற்றிற்கிடையில் வெளிவரும் எனது இந்தச் சிறுநூலை தமிழ் உணர்வாளர்கள் தம் ஆய்வுக்கு எடுத்துக் கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

தனிநாடு / விடுதலை நம் உள்ளத்தை என்றும் நெகிழச் செய்கிறது என்பது உண்மைதான். இடைக்காலத்தில் சரியான கூட்டாட்சி குறித்து நாம் விவாதிப்பதும் தேவையாக இருக்கிறது. கூட்டாட்சி குறித்த எனது கருத்துக்களுக்கு தோழர் வே. ஆனைமுத்து அவர்களுக்கு நான் கடன்பட்டிருக்கிறேன். அதைப்போலவே, தேசிய இனமென்ற ஸ்டாலினிய வரையறைகள் இன்று நமக்குப் போதாத நிலையில் (சாதி மத வேறுபாடுகளை மறுப்பதாகிய) சமனியத்தையும், (சமதர்மம் எனப்படும்) நிகரமையத்தையும் ஸ்டாலினிய வரையறைகளோடு சேர்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இத்தகைய ஓர் அரிய கருத்துக்கு அறிஞர் கு.ச. ஆனந்தன் அவர்களுக்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன்.

சிந்தனைச் செம்மல் கு.ச. ஆனந்தன் அவர்கள் இன்று நம்மோடு இல்லை. மாநில சுயாட்சி பற்றி தமிழில் முதல்பெரும் ஆய்வு நூலை நமக்கு வழங்கிய அறிஞர் ஆனந்தன் அவர்கள் இறுதிவரை திராவிட முன்னேற்றக் கழகத்தினரோடுதான் இருந்தார். தமிழனுக்கு விடுதலை வேண்டும் என்று பெருவேட்கை கொண்ட அவர் தமது இறுதிக்காலத்தில் இனியும் தமிழ்த்தேசிய அரசியலுக்கு திராவிட இயக்கம் பயன்பட்டது, மக்கள் இயக்கம் தேவையென்று எழுதினார். சரியான கூட்டாட்சி என்ற அடிப்படையில் நூறு பக்க அளவில் சுருக்கமான அரசியல் அமைப்பு சட்டநகலொன்றை அணியப்படுத்தித் தரவேண்டுமென்ற என் வேண்டுகோளை அவர் ஏற்றிருந்தார். இதைச் செய்வதற்கு முன் அவர் மறைந்துவிட்டார். தனிப்பட்ட முறையில் என்னிடம் பேரன்பு கொண்டிருந்தார்.

அறிஞர் கு.ச. ஆனந்தன் அவர்களுக்கு இந்த நூலை காணிக்கையாகப் படைக்கிறேன்.

என் அருமை நண்பரும் தமிழ்த்தேசிய உணர்வில் என்னை மிஞ்சி இருப்பவருமான மு. குமரவேல் அவர்கள் என் வேண்டுகோளை ஏற்று அணிந்துரை தந்தார். என் நண்பரும் தமிழில் ஓர் அசலான கவிஞராக எழுச்சி பெற்று வருபவருமான பாலைநிலவன், எனக்காக இக்கட்டுரைகளை படித்த உணர்வுப் பெருக்கோடு அவர் எனக்கு எழுதிய கடிதத்தையும் இந்த நூலில் சேர்த்திருக்கிறேன். "இலட்சியப் போராளியில்" வெளிவந்த என் கட்டுரைகளுக்கு என் மரியாதைக்குரிய திரு. தமிழ்மணி அவர்கள் எழுதிய செரிவான திறனாய்வையும், அதற்கு என் பதிலையும் இத்தொகுப்பில் இணைத்திருக்கிறேன். இலண்டனிலிருக்கும் தமிழ் ஈழ நண்பர்கள் வெளியிட்ட "இன்னும் ஒரு காலடி" என்ற நூலில் இடம்பெற்ற என் கட்டுரையையும் சேர்த்திருக்கிறேன். பெரியவர்கள், நண்பர்கள் அனைவருக்கும் என் மனம் நிறைந்த நன்றி.

தமிழ்த்தேசியம் என்பது இல்லாமல் இனி நமக்கு வாழ்வு இல்லை. விடுதலை இல்லை. வள்ளுவரும் இளங்கோவும் நமக்குள் இன்னும் இருந்து தமிழ்த்தேசியமென்ற இயக்கத்தைத் தூண்டுகிறார்கள். தமிழ்த்தேசியத்தின் விளைச்சல்கள் என திகழும் எத்தனையோ தமிழ் அறிஞர்கள், கவிஞர்கள், போராளிகள் முதலிய அனைவரையும் நெஞ்சில் நிறுத்தி நாம் முன் செல்வோம்.

தமிழனின் இன்றைய நிலை குறித்து ஓவியம் தந்த திரு. ரகு அவர்களுக்கு நன்றி.

– ஞானி

அணிந்துரை - மு. குமரவேல்

## ஞானியின் நூல் நமக்குள் ஏற்படுத்தும் தேடல்களும் கேள்விகளும்

ஞானியின் 'தமிழன் வாழ்வும் வரலாறும்' என்ற நூல் தமிழ்த்தேசியத்தின் முன் உள்ள பல்வேறு சிக்கல்களை நம்முன் விரிக்கிறது. தமிழகத்தில் பேரரசுகள் தோன்றுவதற்கு முன்பிருந்த வரலாற்றை இலக்கியச் சான்றுகளிலிருந்து சொல்கிறார். பேரரசுகள் தோன்றியபோது அதற்கு முன்பிருந்த பாரி போன்ற மன்னர்களின் கொடைத்திறன், மக்கட்சார்பு பற்றிப் பேசுகிறார். கடந்த 50 ஆண்டுகளுக்கும் மேலாக நடைபெற்ற ஆய்வுகளிலுள்ள உண்மையை எடுத்துரைக்கிறார். தமிழர்களின், தமிழின் தொன்மை, பண்பாடு மேன்மை பற்றிய அதே சமயம் அத்தகைய பெருமித உணர்வை தமிழ் மக்களிடையே எடுத்துச் சென்று பெரிய அளவுக்கு செல்வாக்கு சேர்த்த திராவிட இயக்க அரசியல்வாதிகளின் இன்றைய நிலையைத் தோலுரிக்கிறார். தமிழ்ச் சமூகம் எப்படி வளர்ந்திருக்க முடியும்? என்பதை மார்க்சிய அணுகுமுறையோடு சொல்கிறார்.

தமிழக வரலாறு பற்றிய தி.மு.க.வின் நிலைப்பாட்டைக் கடுமையாக விமர்சிக்கிறார். கங்கை கொண்டான், கடாரம் கொண்டான் என்று ஆதிக்கம் வகித்தவர்களைப் பற்றியே பேசி இன்று தமிழ்மக்களை ஆதிக்கம் செய்வதற்கேற்ப இலக்கியத்தையும் வரலாற்றையும் குறுக்குகிற போக்கை அம்பலப்படுத்துகிறார். சமதர்மம் என்கிற கருத்தாக்கத்தை முற்றிலும் இறக்குமதிச் சரக்காகவே பேசி வரும் மார்க்சியர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களின் அணுகுமுறையை விமர்சிக்கிறார். இவர்கள், மக்களின் ஆற்றல் பற்றியோ, சமூக வளர்ச்சியின் படிநிலைகள் பற்றியோ அறியாதவர்கள் தம்மை மார்க்சியர் என்று சொல்லிக் கொள்வது பற்றிக் கடிந்துரைக்கிறார்.

கடவுளுக்கும் தமிழர்களுக்கும் தொடர்பே இல்லை. தமிழகம் முற்ற முழுக்க பொருள்முதல்வாத அடிப்படைகளையே கொண்டது என்று பேசுவதை மறுக்கிறார். கடவுள் என்கிற கருத்தாக்கம் வரலாற்று வழியில் தோன்றியது எப்படி? அதற்கு தமிழ்ச் சமூகமும் விதிவிலக்காக இருந்திருக்க முடியாது என்கிறார்.

"உண்மையில் அறம்தான் தெய்வமாக இருக்கவேண்டும். புத்த மதத்தில் அறத்திற்கு இந்தத் தகுதி தரப்பட்டது. இறைமைக் கருத்தின் மனிதச்சார்பு, அறச்சார்பு, தமிழ்ச் சார்பு பற்றித்தான் நாம் பேசுகிறோம்" என்கிறார்.

மனிதனின் தோற்றம், சமூகத்தின் பரிணாம வளர்ச்சியில் மொழி வகிக்கும் பாத்திரம், நான் எப்படித் தமிழனானேன் என்று தொடங்கி 'நானும் என் தமிழும்' கட்டுரை முழுக்க மார்க்சிய ஆய்வு தொடர்கிறது. மொழி என்பது வெறும் ஊடகம் அல்ல. 'மொழி என்பது உயிர்ச்சக்தி'. 'உலகை உய்விக்கும் சக்தி'. விடுதலை உணர்விற்குள் திரண்டிருக்கும் சக்தி என்கிறார்.

மொத்த நூலின் சாரம் என்று கீழ்க்கண்ட வரிகளைக் கூறலாம்.

"என் கிராமத்துப் பெரியவர்களுக்குள் வள்ளுவரையும் சித்தர்களையும் நான் பார்க்கிறேன். இவர்கள்தான் தமிழ் மண்ணுக்கு உரமாகவும் உயிராகவும் இருக்கிறார்கள். உழவுத் தொழிலின் விளைச்சல் இந்தப் பெரியவர்கள். இயற்கை தரும் மாபெரும் விளைவை இவர்கள் வழியே விளைச்சலாக நமக்குத் தந்தார்கள். இவர்கள் தம் உழைப்பின் விளைச்சலை நம்மோடு பகிர்ந்து கொண்டார்கள். இயற்கை இவர்களுக்குள் அன்பை விளைவித்திருக்கிறது. தாய் மட்டுமா என்னைப் படைத்தார்? இந்த உழவர்களும், உழைக்கும் மக்களும் மண்ணும் வானமும் என்னைப் படைத்திருக்கின்றன. இவர்களின் வழியேதான் நான் வாழ்கிறேன். இவர்கள் தம் வாழ்வியல் அனுபவங்களை எத்தனை கலைகளில் தேக்கி வைத்திருக்கிறார்கள். இவர்கள் வழியே உலக அளவில் நான் விரிகிறேன். இப்படித்தான் நான் மனிதனாக / தமிழனாக வாழ்கிறேன்."

மேற்கண்ட வரிகளைத் தம்முள் செரித்துக் கொண்டவர்களே புரட்சியாளராக முடியும். இத்தகைய தமிழன் உலகின் எந்த மூலையில் வாழ்ந்தாலும், உயிர்களை நேசிப்பான். ஆதிக்கத்திற்கு உட்படமாட்டான். இவனுக்குள் அகங்காரம் இருக்காது. இயற்கை வளங்களை அழிக்கும் ஆற்றல்களுக்கு எதிராக அனைத்தையும் இழக்கத் துணிவான். மார்க்சியம் என்றும், தமிழ்த்தேசியம் என்றும் பேசும் தோழர்களும், தம்மிடம் திரண்டிருக்கும் செல்வம் சமூகம் நமக்களித்த கொடை என்பதை உணரவேண்டும் என்கிறது இவரது பார்வை.

தமிழர்களுக்குத் தொன்மையான வரலாறும் பண்பாடும் இருக்கிறது.

சிற்பம், கட்டடம், இசை, வேளாண்மை, கைவினைகள் என்று ஏராளமான துறைகளில் தமிழர்களின் பங்களிப்பின் மேன்மை பற்றிச் சொல்கிறார். அதேநேரம் இந்தப் பெருமிதம் உலகத் தொடர்பிலிருந்து தமிழனைத் துண்டித்துவிட்டது பற்றியும் எழுதுகிறார். தமிழகத்தின் இயற்கை வளமான, ஆறுகள், கடல்கள், நிலங்கள், வேளாண்மை நாசமாக்கப்படுவது பற்றி இடைவிடாது எச்சரிக்கிறார். மொழி என்னும் இனம் என்று மட்டும் பேசிவிட்டு இருப்பதன்மூலம் ஆதிக்கவாதிகள், நாட்டைக் கொள்ளையிட்டுச் செல்வதற்கு வழிவகுக்கும் அரசியல்வாதிகளை இனம் காட்டுகிறார். இயற்கையைக் காப்பாற்றுவது அரசியலுக்கு அப்பாற்பட்ட, அந்தரத்திலிருக்கிற செயல் எனக் கருதுகிறவர்களை அம்பலப்படுத்துகிறார்.

புதிய காலனியம் என்கிற வடிவத்தில் வந்துள்ள பன்னாட்டு நிறுவனங்களின் ஆதிக்கத்தையும் மூலதனத்தின் ஆட்சி எல்லைகள் விரிவுபடுத்தப்பட்டு, அது அங்கிங்கெனாது எங்கும் தேசங்களை, மொழிகளை, மக்களை அழித்து வருவது பற்றியும், உள்நாட்டில் அவ்வாறு அழிப்பவர்களுக்குத் துணை நிற்பவர்கள் பற்றியும் சொல்கிறார். அறிவியல், தொழில்நுட்பம் என்கிற வடிவில் வந்துள்ள புதிய அடிமைத்தனம் பற்றி எழுதுகிறார். நவீன தொழில்நுட்பங்கள், வர்க்க ஒர்மையைச் சிதைக்கின்றன. இயற்கையின் சமநிலையைக் குலைக்கின்றன. பெருவாரியான மக்களின் பங்களிப்பை ஒதுக்குகிறது. அதன்மூலம் சனநாயகத்தை அழிக்கின்றன என்பதையும் இங்கு சேர்த்துச் சொல்லலாம்.

சாதிகளின் தோற்றம், அவற்றின் பொருளியல் அடித்தளம் பற்றி எழுதுகிறார். திராவிடர்கள் சாதிகளுக்கு எதிரானவர்கள், ஆரியன்தான் சாதியை இங்கு வந்து புகுத்திவிட்டான் என்கிற கருத்து சரியான வரலாற்று ஆய்வாக இருக்கமுடியாது என்கிறார். நெடுங்காலமாக இந்தியாவில் நிலவி வருகிற ஆசிய உற்பத்தி முறை பற்றிச் சொல்கிறார். தரம்பால் அவர்களின் ஆய்வின்படி சமூக உற்பத்தி பகிர்ந்தளிக்கப்பட்ட வரலாற்றை மேற்கோள் காட்டுகிறார். 200 ஆண்டுகளுக்கு முன்பு சமூக உற்பத்தி பகிர்ந்தளிக்கப்பட்ட விகிதத்துக்கும் இன்றைய நிலையில் பகிர்ந்தளிக்கப்படுவதற்குமுள்ள ஏற்றத்தாழ்வை விவரிக்கிறார். சாதி அமைப்பு யாருக்கு அவசியமாகிறது? இன்றைய நிலையில் யார் அதனைக் கட்டிக் காக்கின்றனர். ஆதிக்கவாதிகளுக்கும், சுரண்டுபவர்களுக்கும் சாதி தேவைப்படுகிறது. உழைக்கும் மக்களை சமதருமம் என்ற கருத்தியலை முன்னிருத்தி சாதிகளைக் கடந்து தமிழர்களாக ஒன்றிணைக்க வேண்டிய அவசியம் பற்றிச் சொல்கிறார்.

இனி தமிழனுக்கான அரசியல் என்று தமிழ்த்தேசிய அரசியலை மட்டுமே சொல்லமுடியும் என்கிறார். தமிழ்நாடு தமிழருக்கே என்ற முழக்கம் தமிழ்த்தேசியத்தின் குரல்தான் என்கிறார். இந்தியாவில் பல்வேறு தேசிய இனங்களும் ஒடுக்குமுறைக்கு உள்ளாகின்றன. இந்துத்துவம், கலாச்சார தேசியம் என்கிற கருத்தை முன்மொழிகிறது நாம் எச்சரிக்கையோடிருக்க வேண்டும் என்கிறார். தமிழ்ச் சமூகத்திற்கு உள்ளிருந்தே இந்துத்துவம் தனக்கான சக்திகளைத் திரட்டுவதில் முந்துகிறது என்கிறார். வரலாற்று வழியில் கடவுள் கோட்பாடு. மத நம்பிக்கை, சடங்குகள் போன்றவற்றின் தோற்றம் இவற்றை மார்க்சிய அடிப்படையில் புரிந்து கொண்டால் மட்டுமே இந்துத்துவத்தை விரட்டமுடியும். சாதி, மத, மூட நம்பிக்கைகளை எதிர்ப்பது, பார்ப்பனர்களை எதிர்ப்பது மட்டுமே நமது இலக்கல்ல. சமதருமமே நமது இலக்கு என்னும் பெரியாரியத்தின் மைய இழையை அடையாளம் காணுகிறார். தமிழரல்லாதர் குறிப்பாகத் தெலுங்கர்கள் எவ்வாறு தமிழ்த்தேசியத்திற்கு எதிராகச் செயல்பட்டார்கள் என்ற குணாவின் ஆய்வுகளை மேற்கோள் காட்டுகிறார். இந்த இடத்தில் பெரியாரைத் தெலுங்கர், தமிழர்களின் நலன்களுக்கு எதிரானவர் என்கிற அடிப்படையில் விமர்சிக்கும் குணாவை நாம் எந்த வகையிலும் போற்ற முடியாது. இவருடைய அரசியல் இறுதியில் தமிழ் மக்களிடையே பிளவைக் கூர்மைப்படுத்தும். பெரியாரியத்தின் மையத்தைப் புரிந்து கொள்ளாத இவரது ஆய்வு, இறுதியில் தமிழர்களுக்கு விரோதமான அரசியலாகத்தான் மாறும், என்றே நாம் கருதவேண்டியிருக்கிறது.

தமிழ்த்தேசிய இயக்கங்கள் நிலம், இயற்கை, நிர், கல்வி, சந்தைப் பொருளாதாரம், பெண் விடுதலை, தலித் விடுதலை என சமூகத்தின் பன்முகப் பரிமாணத்தையும் கவனத்தில் கொள்ள வேண்டிய அவசியத்தை விளக்கியுள்ளார். சாதி, மத, பார்ப்பனிய ஆதிக்கம் இவற்றுக்கெதிராகவும் அத்தோடு, முதலாளிய, தனியுடைமை ஆதிக்கத்திற்கு எதிராகவும் பேச வேண்டும் என்கிறார்.

'ஒவ்வொரு நாளும் தமிழ்த்தேசியம்' என்ற கட்டுரை நமது வாழ்க்கை முறையின் மீது கேள்வி எழுப்புகிறது. நாம் உண்ணும் உணவு, உடுத்தும் உடை, பயன்படுத்தும் கருவிகள், நமது பழக்கவழக்கங்கள் இவை பற்றியெல்லாம் சிந்திக்க வேண்டுமென்கிறார். "வல்லரசியமோ முதலாளியமோ நம் அன்றாட வாழ்வியலுக்குள்ளும் ஊடுருவி நம்மை வசப்படுத்தி வைத்திருப்பதன் மூலமே அவை நமக்குள் வெற்றி பெறுகின்றன என்று சொல்வது அன்றாட மார்க்சியம்" என்கிறார். இந்த வகையில் நமது

வாழ்க்கை முறை எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும் அதாவது ஆடம்பரமான வாழ்க்கையை வாழ்வதன் மூலம் மக்களை ஆதிக்கம் செய்பவர்களின் கருவியாக நாம் ஆகிறோம் என்கிற புரிதல் வேண்டும் என்கிறார்.

கூட்டாட்சியின் தேவை குறித்து இந்த நூலில் விவாதிக்கிறார். இரண்டு உதாரணங்களை இங்கு சொல்ல விரும்புகிறேன். இட ஒதுக்கீட்டுக்கு ஆதரவாக தமிழக சட்டமன்றம் ஒரு மனதாக தீர்மானம் இயற்றி அனுப்பியது. இன்றுவரை அதன் நிலை என்ன? மற்றொன்று, காவிரிச் சிக்கல், நீதிமன்றம் ஆணையிட்டுவிட்டது. மத்திய அரசிதழிலும் வெளியிட்டாகிவிட்டது. நடந்தது என்ன?

மேற்கண்ட இரண்டு சிக்கல்களிலும் மத்திய அரசு சனநாயகத்தையும் நீதியையும் குழிதோண்டிப் புதைத்துள்ளது. தவிரவும், இந்தியாவிலுள்ள பல்வேறு தேசிய இனங்களும், போராட்ட நிலைகளில் பல்வேறு படிநிலைகளில் உள்ளன. வடகிழக்கு மாநிலங்களில் உள்ள தேசிய இனங்கள் நம்மைவிடக் கூடுதலான போராட்ட நிலைகளை மேற்கொண்டுள்ளன. காஷ்மீரம் அதேபோன்றுதான். விடுதலைக்கான முயற்சி எதுவுமில்லாத நிலையில் கூட்டாட்சிக் கோட்பாட்டின் அடிப்படையிலான ஓர் அரசியலைப்புச் சட்டத்திற்கு நாம் உரிமையோடு முயற்சி செய்ய முடியும் என்கிறார். கூடடாட்சிக்கான முயற்சி என்பது குறைவு அல்லது இல்லை என்றே சொல்லலாம். விடுதலை என்பதை அதன் பெயராலேயே கேட்கலாம். பல்வேறு தேசிய இனங்களின் போராட்டம் வெடிக்கும்போது டெல்லி வல்லாதிக்கம் வேண்டுமானால் கூட்டாட்சி பற்றிப் பேசட்டும். அப்போது பல்வேறு மாநிலங்களின் நிலைமைகளை ஒட்டி நாம் சிந்திக்கலாம். இன்றைய நிலையில் தேசிய இனங்களின் சுயநிர்ணய உரிமைக் கோட்டிபாட்டின் அடிப்படையில் தமிழ்த் தேச விடுதலைக்கான முழக்கத்தையே முதன்மைப்படுத்த வேண்டும். புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம் என்ற முழக்கத்தியை முன் வைத்துள்ளவிடுதலைப் புலிகள் அமைப்பு இலங்கை அரசுடன் பேச்சுவார்த்தை நடத்தவும் தயார் என்று சொல்ல முடிகிறதே. எனவே, விடுதலையின் உள்ளடக்கத்தோடு கூட்டாட்சி என்று பேசுவதைவிட விடுதலை என்றே பேசலாம் என்றே நான் கருதுகிறேன். ஞானியோடு இவ்வாறு நான் விவாதிக்க விரும்புகிறேன்.

தமிழ்த்தேசிய அரசியல் கூர்மைப்பட்டு வருகின்ற நிலையில் இந்த நூல் நமக்குள் பல கேள்விகளையும், தேடல்களையும் ஏற்படுத்தும் என்பதில் ஐயமில்லை.

## ஒரு கடிதம்

அன்புள்ள ஞானி அவர்களுக்கு,

'இலட்சியப் போராளியில்' வெளிவந்த 'எந்த முகத்தோடு இன்றைய தமிழர்' கட்டுரைகளைப் படித்தேன். ஆதித்தமிழனின் வரலாற்றிலிருந்து தொடங்கி மிகக் கேவலமான சரண்டலுக்கு உள்ளான இன்றைய தமிழனின் சோகம் நிறைந்த வாழ்க்கை வரைக்கும் சான்றுகளோடு நீங்கள் தரும் செய்திகள் பரவசத்தோடும் துக்கத்தோடும் என்னை அமர வைத்தன.

மெய்யியல் மரபும் வீரமும் நிறைந்த தமிழன் நாசமாக்கப்பட்டது மிகப்பெரிய வரலாற்று ஒடுக்குமுறைதான். வஞ்சகமும் சூழ்ச்சியும் நிறைந்த அரசியல் கோசங்களில் தமிழன் ஏமாற்றப்பட்டது முதுகில் குத்துகிற துரோகத்தை விடவும் இழிவானது.

இலக்கிய மரபில் நீங்கள் அடிக்கோடிட்டுக் காட்டும் சில பாத்திரங்கள் நெஞ்சை வதைக்கின்றன. சொர்க்கத்திற்கு அழைப்பு வந்தால் ஆபுத்திரனைப்போல் பசித்தவர்கள் இருக்கிறார்களா? என்று கேள்வி கேட்க முடியுமா என்று நம் தமிழ்த் தலைவர்களிடம் கேட்டுப் பார்க்க வேண்டும். ஆபுத்திரனின் சாவு ஒரு சோசலிசச் சாவுதான்.

களப்பிரர் காலத்தில் ஏற்பட்ட கலகம் ஏன் நின்றுபோனது என்ற கேள்வியோடு வருத்தமும் ஏற்பட்டது. எப்படி வாழவேண்டியவன் தமிழன்? சொந்த மண்ணில் ஒரு பைத்தியக்காரனைப் போல் அலைய நேர்ந்ததை அவன் எத்தனைக் காலம் சகிப்பான். அவன் மகிழ்ச்சியை, வீரத்தை, பிரபஞ்சத்தோடு காதல் வைத்திருந்த அவன் மனத்தை, வணிகச் சந்தையாக்கி மலுங்கடித்துக் கொண்டிருக்கும் தமிழத் தலைவர்களை அவன் மன்னிக்காத காலம் வரத்தான் போகிறது.

யார் தமிழன் என்ற கேள்விக்கு நீங்கள் சொல்லும் பதில் மிகச் சரியானது. தமிழர்களின் வளத்தையும், வாழ்க்கையின் செழிப்பையும் கொள்ளையடித்தவர்கள் எப்படித் தம்மை தமிழனென்று இன்னமும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். என்றைக்கு இதயத்திலிருந்து பேசுவார்கள்?

டெல்லி மட்டுமல்ல தமிழனின் வாழ்க்கையைத் தீர்மானிப்பது அமெரிக்கா உட்பட நீங்கள் குறிப்பிடும் நாடுகளும்தான் என்பதில் சந்தேகத்திற்கு இடமில்லை. தமிழனின் நிலத்தையும் வானத்தையும் அவனிடமிருந்து பிடுங்கியவர்கள் அவனுக்கு பதில் சொல்லித்தான்

ஆகவேண்டும். தமிழ்த்தேசிய அரசியலைப் பற்றிய உங்கள் விரிவான பார்வை தமிழ்த்தேசியத்தின் கட்டுமானத்திற்கான வடிவம். திராவிடர் கழகத்தின் செயல்பாடுகளின்மேல் நீங்கள் வைக்கும் விமர்சனம் நியாயமானதுதான். பெரியாருக்குப் பின் அவருடைய கொள்கைகளுக்கு ஏற்பட்ட நீண்ட தேக்கத்தை நாம் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்வது இக்கட்டான இந்தக் காலத்தின் தேவை.

தமிழ் இலக்கிய மரபிலிருந்து நீங்கள் தொகுத்துத்தரும் தமிழ் மெய்யியல் பரவசமூட்டுகிறது. பிரபஞ்ச நேயம், மானுடநேயம், சமதர்மம், இதற்குமேலும் நீங்கள் மழையாய்ப் பெய்கிறீர்கள். உன்னதமான மரபு உன்னதமான மரபு என்று ஆயிரம் தடவை மந்திரம் சொல்வதுபோல் மனசுக்குள் ஈர இரைச்சல்.

அன்றாட மார்க்சியம் என்று நீங்கள் முன்வைக்கும் கேள்விகள் நடைமுறைப்படுத்தப்பட வேண்டியவை. ஒவ்வொரு நாளும் நான் யாருக்காக வாழ்கிறேன்? என்ற கேள்வியின் மையத்தில் தொடங்கும் தமிழ்த்தேசிய வாழ்க்கையை தொடங்கியாக வேண்டும்.

உலகளவில் தமிழன் இன்று எதிர்கொள்ளும் பிரச்சனைகள் அவன் கழுத்தை நெறித்துக் கொண்டிருக்கின்றன. பசியின் ஓலமும் அழுகையும் அவமானமும்தான் அவனுடைய இன்றைய இருப்பு. நெடுங்காலமாய் அவன் நம்பியவர்கள் நடுஆற்றில் அவனை இறக்கிவிட்டுப்போனதை ஆழமாய் பதிவு செய்திருக்கிறீர்கள்.

முதலாளியத் தமிழ் அரசியலுக்கெதிராய் அவன் போராடித்தான் வசந்தத்தைப் பெற்றுக் கொள்ள முடியும். இந்துத்துவ அரசியலின் ஒடுக்குமுறையை அவன் வென்றெடுப்பான். மதுரா தேவிகள் கண்ணகிக்கு முன்னால் கூனிக்குறுகித்தான் ஆகவேண்டும். மக்களுக்கு வறுமையையும், சோகத்தையும் தந்துவிட்டு ஆட்சியாளன் அவனுக்கு முன்னால் நெஞ்சு நிமிர்த்தி நிற்பது மானமும் வீரமும் நிறைந்த தமிழன் செய்யக்கூடிய வேலையல்ல. தலைவர்கள் யோசிக்கட்டும்.

அப்புறம் இன்னொன்றையும் சொல்ல வேண்டும். உலகளவில் மட்டுமல்லாமல் இந்தியாவினுள்ளும் தமிழகத்தினுள்ளும் தமிழ் மக்களாகிய நாம் அகதிகளாகி வருகிறோம் என்று நீங்கள் ‘அகதியாகும் தமிழன்’ என்ற கட்டுரையில் குறிப்பிடுவது கண்முன்னால் நடந்துகொண்டுதான் இருக்கிறது. நமக்கான தமிழ்த்தேசியம் எது என்ற கேள்விக்கு கூழாங்கற்களைத் தழுவிச் செல்லும் ஆற்றுநீர் போன்ற உங்கள் தமிழ்நடையில் பதில் கிடைத்ததில் மகிழ்ச்சி.

- பாலை நிலவன்

# உள்ளடக்கம்

# 1. எந்த முகம் தமிழனின் முகம்?

தமிழர் நாகரிகம் மிகத் தொன்மையானது என்று சொல்வதற்கு ஆதாரங்கள் நிறையவே உள்ளன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது சங்க இலக்கியம். சங்க காலத்தில் நகர நாகரீகம் செழித்திருந்தது. கிரேக்கம் முதலிய நாடுகளோடு தமிழர் வணிகம் செய்தனர். சங்க காலத்தில் மூவேந்தர்கள் நிலைபெற்றிருந்தனர். சங்க காலத்திற்குச் சற்று முந்தைய காலத்தைச் சேர்ந்த வேளிர்கள் எனப்படும், கடையேழு வள்ளல்களை மூவேந்தர்கள் ஒவ்வொருவராக வெற்றி கொண்டு அழித்தனர்.

தொன்மைச் சமுதாயத்தில் இருந்த ஆதிப்பொதுமைக் கூறுகள் பிந்திய சமுதாயத்தில் கொடை என்றும் விருந்து என்றும், ஒப்புறவு என்றும், பெயர் பெற்றன. தொன்மைச் சமுதாயத்தில் நிலவிய களவு என்ற மணமுறையையே சான்றோர்கள் தொடர்ந்து போன்றினர். குடும்பத்திற்குள்ளும் உடைமைக்கு மரியாதை ஏற்பட்ட நிலையில் காதல் மணமுறையைப் பெற்றோர் மறுத்தனர். பாணர்கள் வள்ளல்களின் அழிவிற்கு பிறகு பழுத்த மரம்தேடி அலையும் பறவைகள் போல நாட்டில் அலைந்தனர்.

முன்னைய சமுதாயத்தின் கூறுகள் பல சங்க காலத்தில் நிலவியதைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. குறிஞ்சி, முல்லை, நெய்தல் நிலங்களில் முன்னைய காலத்து வழிபாட்டு முறைகள் தொடர்வதைச் சங்க இலக்கியத்தின் வழியே அறிகிறோம். குறிஞ்சி, முல்லை, நெய்தல் நிலங்களில் அவற்றிற்கான நாகரிகம் நிலவியது கொண்டு தமிழ்ச் சமுதாயத்தின் தொன்மையை மேலும் சில – பல நூற்றாண்டுகள் முன் நகர்த்திப் பார்க்க முடியும்.

தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியம் மற்றும் வாழ்வியல் குறித்த கலைச் சொற்களின் திறம் கண்டு இன்றும் நாம் வியக்கிறோம். சங்க இலக்கியத்தில் காணப்படும் இலக்கியச் செழுமை உருவாவதற்கு மேலும் பல நூற்றாண்டுகளை நாம் முன் நகர்த்திப் பார்க்க வேண்டும். சிலப்பதிகாரத்தில் தமிழ் இசை, கூத்து, கட்டிடக்கலை, முதலியவற்றின் வளர் நிலையைக் கணக்கில் கொள்ளும்பொழுது வரலாற்றில் பல நூற்றாண்டுகள் அல்லது சில ஆயிரம் ஆண்டுகளாவது முன் நகர்ந்து செல்ல வேண்டும்.

இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு பார்க்கும்பொழுது, தமிழர் நாகரீகம் தொன்மையானது மட்டுமல்ல, வளமானது என்றும் அறிகிறோம். வரலாற்றில் தமிழர் முன்னேறி வந்தனர். முன்னேற்றத்தின் வழியே சிலவற்றை இழந்தனர். சிலவற்றைப் பெற்றனர். தனியுடைமை அரசு ஆகியவை வளர்ந்த நிலையிலும் தொன்மைக் காலம் சார்ந்த பண்பாட்டுக்கு அழுத்தம் தந்தனர் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்பது இந்தப் பண்பாடு. வள்ளுவர் இருவேறு உலகத்து இயற்கை பற்றிக் குறிப்பிடுகிறார். திரு–செல்வம் ஒரு பக்கம் : அறிவு – பண்பு இன்னொருபக்கம். இப்படி உலகம் இரண்டாகிவிட்டது. இந்த உலகம் மனிதர் வாழ்விற்கு உகந்த உலகமன்று. இப்படி ஏற்பட்டது, ஒருவகை ஊழ்(விதி); ஊதியம் ஒரு பக்கம் – கூலி இன்னொரு பக்கம் : தீயவனிடம் செல்வம் சேர்கிறது; நல்லவனுக்கு வறுமை வாய்க்கிறது. இதன் காரணம் புரியவில்லை என்கிறார் வள்ளுவர். இதற்கு மாற்றாகத்தான் ஒப்புறவைப் பரிந்துரைக்கிறார் வள்ளுவர். ஊர் நடுவில் உள்ள குளம் நீரால் நிறையும்பொழுது குளத்தைக் கேட்டுத்தான் நீர் எடுக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை தேவையானளவிற்கு யாரும் நீரை எடுத்துக் கொள்ளலாம். ஊர் நடுவில் பழுத்த மரத்திலிருந்து யாரும் கனிகளைப் பறித்து உண்ணலாம். சில மரங்கள் மருந்தாகப் பயன்படுகின்றன. மரத்தின் இலைகளையோ, காய், கனி வகைகளையோ யாரும் பறித்துக் கொள்ளலாம். இது தான் தமிழ் மக்களுக்கு வள்ளுவர் வகுத்த அறம். இத்தகைய அறத்திற்கு இன்று நாம் வைக்கின்ற பெயர் சமதர்மம்.

சங்க காலத்தில் வாழ்ந்தவன். பாரி, முல்லைக்கொடிக்குத் தேர் ஈந்தவன் பாரி என்று பாராட்டுகின்றோம். தன் முன்னூறு ஊர்களையும் பரிசிலற்குப் பாரி தந்தான். இவன் புகழ் எங்கும் பரவியது. மூவேந்தர்களுக்குப் பாரியின்பால் பொறாமை ஏற்பட்டது. பாரி எல்லாவற்றையும் கொடுக்கிறான். தேவைப்பட்டால் தன் உயிரையும் கொடுப்பான். மூவேந்தர்களுக்கு உடைமை முக்கியம்; அரசு அதிகாரம் முக்கியம்; எல்லாவற்றையும் வறியவருக்கும் புலவர்களுக்கும் இவர்கள் கொடுப்பார்கள் என்றால் இவர்கள் வேந்தர்களாக இருக்க முடியாது. நாற்படைகளை வைத்துக் கொள்ள முடியாது. பிற நாடுகளை வசப்படுத்த முடியாது.

பாரி போல இன்னும் பல வள்ளல்கள் தமிழகத்தில் அன்று வாழ்ந்தனர். கோப்பெருஞ்சோழன் தன் செல்வத்தை எல்லோருக்கும் தந்தான். இவன் மக்களே இவனுக்கு எதிராகக் கிளர்ந்து எழுந்தனர். கோப்பெருஞ்சோழனை, பொத்தியார் போன்ற புலவர்கள் தடுத்தனர். ஆற்றங்கரையில் வடக்கிருந்து உயிர் துறந்தான். சில புலவர்களும் உயிர் துறந்தனர்.



காலம் மாறித்தான் போயிற்று; உடைமைக்குத் தான் இனி மரியாதை; ஒப்புரவாளனுக்கு இனி மரியாதை இல்லை. நாகரிகம் என்ற பெயரால் இப்படி நாசம் நேர்கிறது. இப்பொழுது இடையில் ஒரு கேள்வி எழுப்பிக் கொள்வோம். வரலாற்றில் உடைமை சேராமல் அரசு அதிகாரமில்லாமல் நாகரிக வளர்ச்சி இல்லை. நாகரிக வளர்ச்சி என்பது தேவை என்பதை நாம் ஒப்புக்கொண்டாலும் இந்த வளர்ச்சி எல்லோருக்கும் சம அளவில் சென்று சேர்வதில்லை. இப்படி எல்லோரும் பகிர்ந்து கொள்வதென்றால் நாகரிக வளர்ச்சிக்கும் வாய்ப்பில்லை. அப்படியானால், ஏற்றத்தாழ்வை நாம் ஏற்கத்தான் வேண்டுமா? ஏற்க வேண்டும் என்றாலும் எந்த அளவில் இந்த ஏற்றத்தாழ்வு இருக்கலாம்? சோசலிச சமுதாயத்திலும் ஏற்றத்தாழ்வுகள் இருக்கத்தான் செய்யும். ஆனால் எல்லோருக்கும் உணவு முதலிய அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றித் தராத சமுதாயத்தின்மீது நமக்கு உடன்பாடில்லை. கம்யூனிசச் சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுகள் முற்றாக ஒழிந்துவிடும் என்று சொல்வதை நாம் மறுக்கவில்லை. ஏற்றத்தாழ்வுகள் எந்த விகிதத்தில் இருக்க வேண்டும்? ஒரு மனிதனுக்கு ஒரு நாள் கூலி ரூபாய் பத்து; இன்னொருவனுக்கு ஒரு நாள் வருமானம் ஓர் ஆயிரம் / பத்தாயிரம் / இலட்சம் / கோடி என்று இருக்கலாமா?

பாரி தமிழன் என்று நாம் மதிக்கிறோம். பாரியின் முகம் தமிழனின் முகம். நிறைவான, அழகிய முகம். பாரியின் முகத்தில் நாம் வள்ளுவரைக் காணமுடியும். கணியன் பூங்குன்றனைக் காணமுடியும். கோப்பெருஞ்சோழன் உயிர் துறக்கும்பொழுது அவன் முகத்தில் நிலவிய வேதனைக்கு நாம் என்ன பொருள் கூற முடியும்? பாரியைத் தமிழன் என்றால் வேந்தர்கள் என்பவர் யார்? இன்றும் நம் நிலை என்ன?

தமிழன் தொன்மையான வரலாறுடையவன்: தொன்மை என்பதை நூற்றாண்டுகளைக் கொண்டு, ஆயிரம் ஆண்டுகளைக் கொண்டு சிலர் அளக்கிறார்கள். இதில் என்ன பெருமை இருக்கிறது? இதில் என்ன அறம் இருக்கிறது? தொன்மையை இப்படி அளக்க முடியாது.

தமிழர் பல்லாயிரம் ஆண்டு வரலாறுடையவர்கள்; வாழ்ந்து வாழ்ந்து அனுபவம் பெற்றவர்கள்; உடைமை மற்றும் அரசு அதிகாரத்தின் எழுச்சியையும் வீழ்ச்சியையும் கண்டவர்கள். செல்வம் தேவைதான்

என்றாலும் பிறரை அழவைத்துச் சேர்க்கும் செல்வம் தானே அழுமாறு அழிகிறது. தீயவனுக்குத்தான் செல்வம் சேரும்; அது அவனுக்கே தீங்கு செய்யும். நல்ல நெறியில் செல்வம் சேர்க்க முடியாது. சான்றோர்களுக்கு வறுமையே அழகு; பகிர்ந்து கொடுப்பது பேரின்பம்; ஊருக்கு உழைப்பது யோகம்; வாழ்ந்து, வாழ்ந்து இத்தகைய பேரனுபவத்தைப் பெற்றவர்கள் தமிழர்கள்: இந்த பேரனுபவத்தைத்தான் அறம் என வள்ளுவர் தன்நூலில் பதிவு செய்திருக்கிறார்.

வள்ளுவரின் முகத்தில் தமிழனின் அழகிய முகத்தைக் கண்டோம். இன்று வள்ளுவருக்கு என்ன மரியாதை கொடுக்கிறோம்? ஆயிரத்து முன்னூற்றி முப்பது அருங்குறள்களையும் உரையோடு பயில்வதால் நாம் தமிழராகிவிட முடியுமா? அறத்தை மதிப்பவன் தமிழன்: அறத்தை வளர்ப்பவன் தமிழன். இரு வேறு உலகம் நமக்கு வேண்டாம். வர்க்கங்களாகப் பிளவுபட்ட உலகம் நமக்கான உலகமன்று, வள்ளுவரின் அறத்தை இன்று நாம் செயல்படுத்துவதன் மூலமே தமிழ் நெறியைக் கடைபிடிப்பவராவோம். இப்படித்தான், தான் இழந்த முகத்தைத் தமிழன் மீட்டுக் கொள்ள முடியும். பாரதிதாசன் தன் பாடல் ஒன்றில் குறிப்பிட்டபடி, "அறம் இது என்றும் மறம் இது என்றும் யாம் அறிகிலாத போது இறையானரின் திருக்குறள் ஒரு சொல்" நமக்கு அறம் எது என்று காட்டும்.



## 2. தமிழன் உலகத்திற்கு உரம், உப்பு, உயிர்.

தமிழனின் தொன்மை பற்றி தெற்கில் குமரிக் கண்டத்தோடும் வடக்கில் சிந்து சமவெளியோடும் இணைத்து அறிஞர் எடுத்துரைக்கின்றனர். குமரிக்கோடும் கொடும் கடல்கொள்ள என்ற குறிப்பு சிலப்பதிகாரத்தில் இடம் பெறுகிறது. தெற்கில் கடல்கொண்ட தென்னாடுபற்றி இறையனார் களவியல் உரை குறிப்பிடுகிறது. இலக்கியங்கள் வழியே பழங்கால நினைவுகள் இப்படிப் பதிந்துள்ளன என்று கருதுவதில் தவறில்லை. இந்துமாக்கடலில் சோவியத் அறிஞர்களின் ஆய்வுகளும், தெற்கில் ஒரு கண்டம் இருந்தது என்பதற்கான சான்றுகள் எனக் கொள்ளலாம். அங்கு மனித இனம் வாழ்ந்ததா? என்பது குறித்து ஐயங்களுக்கும் இடமுண்டு.

உலகில் மிகத்தொன்மையான நாகரிகம். எகிப்தில் தோன்றி கிரேக்கத்திற்கு பரவியது என்றும், எகிப்து நாகரிகத்திற்கும் மூலம் மத்தியக் கிழக்கிலுள்ள ஆசியா மைனர் என்றும், அந்த நாகரிகத்திற்கு மூலம் இந்தியாவின் வடமேற்கு பகுதி என்றும் ஆய்வுகள் உண்டு. சிந்து சமவெளி நாகரிகம் இதன் கிளையாக இருக்க முடியும். சிந்து சமவெளி நாகரிகம் திராவிட நாகரிகம்தான் என்பதற்குத் தொடர்ந்து சான்றுகள் நமக்குக் கிடைக்கின்றன. சிந்து சமவெளி எழுத்துக்களை ஆராய்ந்த பேராசிரியர் மதிவாணன் தரும் சான்றுகள் கடைசியாக நமக்குக் கிடைத்தவை. ஆரியர் வருகைக்கு முந்தியது சிந்துவெளி நாகரிகம் என்ற உண்மை நமக்குப் போதுமானது.

அறிஞர் கால்டுவெல் துணிந்துரைத்த உண்மை குறித்து நாம் அறிந்துள்ளோம். இந்தியா முழுவதும் திராவிட மொழிகள் பரவியுள்ளன. கடைசியாகக் கிடைத்த சான்றுகளின்படி இந்தியாவில் வழங்கும் முப்பதுக்கும் மேற்பட்ட மொழிகள் திராவிடர் தமிழர் மொழியோடு உறவுடையவை. அறிஞர் பாவணர் அவர்கள் தமிழ் தான் உலக மொழிகளுக்கெல்லாம் தாய்மொழி என்று அறிவுத் திறத்தோடு எழுதினார். யப்பானிய மொழிக்கும்கூட மூலம் தமிழ்தான் என்றும் இன்று அறிஞர் ஆய்ந்து உரைக்கின்றனர்.

இந்தக் குறிப்புக்களையெல்லாம் தமிழனுக்கு நெடுங்கால வரலாறு உண்டு என்று பெருமை பேசுவதற்காக இங்கு நான் குறிப்பிடவில்லை. தமிழர்களை மத்தியதரைக்கடல் பகுதியிலிருந்து இங்கு குடியேறியவர்கள்

என்ற சிலரது கூற்றையும் இங்கு நாம் நினைவில் கொள்கிறோம். பெருமை பேசுவது வரலாற்றில் சில சூழல்களில் தேவைப்படலாம். ஆனால் தொடர்ந்து பேசும் பெருமை தற்பெருமையாகி இறுதியில் ஆணவமாகவும் மற்றும் நம் கண்களை நாமே அவித்துக் கொள்வதற்கும் காரணமாகிவிடக்கூடும். இந்நிலையில், உலகம் நம் கண்களிலிருந்து மறைந்துவிடும். 'கல்தோன்றி மண்தோன்றாக் காலத்து முன் தோன்றி மூத்த குடி.' என்று பேசுவது இவ்வகைப் பெருமை: இனி உலகிலிருந்து கற்றுக்கொள்வதற்கு என்ன இருக்க முடியும்? என்று கூட நாம் எண்ண நேரிட்டது இப்படித்தான், வரலாறு வந்து நம்மைத் தாக்கும் நேரத்தில் நம்மில் சிலரேனும் இந்த ஆணவத்தை ஒதுக்கிவிட்டு கண்விழித்துப் பார்க்கிறோம். திருவள்ளுவர் சொல்லாததை எவன் சொல்லிவிட்டான் என்று இன்று நாம் கேட்பதில்லை. இராசராச சோழனுக்கு விழாக் கொண்டாடுவதை இப்பொழுது நாம் ஆதரிப்பதில்லை. வெள்ளிமகுடங்கள் கேட்கும் தலைவர்கள் நமக்கு இன்று வேண்டியதில்லை. கங்கைகொண்டான், கடாரம் கொண்டான் என்ற பேச்சுக்கள் இன்று நம்மை சிறுமைப்படுத்த கூடியவை.

மேலும், ஒரு உண்மைபற்றித் தொடர்ந்து சொல்லலாம். ஆரியர் வருவதற்கு முன்பு இந்தியா முழுவதும் பரவி இருந்தவர்கள் திராவிடர்கள். டாக்டர் அம்பேத்கரும் இந்த உண்மையை ஒப்புக் கொள்கிறார். ஆரியர்களின் வேதங்களினுள்ளும் திராவிடர்களின் பங்களிப்புண்டு. ஆரிய கடவுளர் என்று பின்னர் சொல்லப்பட்டவர்களுக்குள்ளும் திராவிடர் கடவுளர் உண்டு. கண்ணன் முதலியவர்கள் திராவிடக் கடவுளர். வியாசனும், வால்மீகியும் ஆரிய நெறியில் சூத்திரர்கள் அல்லது தாழ்த்தப்பட்டவர்கள். வேதங்களுக்கு மாறுபட்ட சாங்கியம், வைசேடிகம், சார்வாகம் முதலிய தரிசனங்கள் திராவிடச் சார்புடையவை. புத்தமும், சமணமும் திரண்டு திராவிட எல்லைக்குள் வருபவை. டாக்டர் இராதாகிருஷ்ணன், சுனித் குமார் சட்டர்ஜி ஆய்ந்து உரைத்தபடி, இந்திய நாகரிகம் என்பது மேல் அடுக்கில் ஆரிய நாகரிகம் என்று அறியப்பட்டிருந்தாலும், அந்த மேல் அடுக்கை நீக்கிப் பார்க்கும்பொழுது; அதன் அடித்தளமாக இருப்பது திராவிட நாகரிகம்தான்.

இந்தியாவைத் திராவிட இந்தியா / தமிழ் இந்தியா என்று சில அறிஞர்கள் கூறியதன் பொருத்தப்பாட்டை நாம் ஏற்க முடியும். பல்லாயிரம் ஆண்டுகளாக இந்தியாவில் நிலங்களைப் பக்குவப்படுத்தியவர்கள், நூற்றுக்கணக்கான பயிர்களைக் கண்டறிந்து பக்குவப்படுத்தியவர்கள்.



கட்டிடக்கலை முதலியவற்றை வளர்த்தெடுத்த கைவினைஞர்கள் – இவர்களையெல்லாம், ஆரியத்தோடு நாம் எப்படி தொடர்புபடுத்த எப்படி முடியும்? இவர்களின் வாழ்வுக்கு ஆதாரமாக இருந்தது எந்தமொழி?

வேதங்களை நுணுகி நுணுகி ஆராய்ந்த அம்பேத்கர் வெளிப்படுத்திய ஓர் உண்மை இங்கு குறிப்பிடத்தக்கது. உலகப் படைப்பு, உயிர்களின் தோற்றம் முதலிய அனைத்திற்கும் மூலம், கடவுள் என்ற கருத்து இடம் பெறும் அதே வேதங்களில் கடவுள் முதலிய அனைத்திற்கும் மூலம் மனிதன் என்ற கருத்தும் காணப்படுகிறது என்கிறார் அம்பேத்கர்.

திராவிடர்களின் நாகரிகம் உலகியல் சார்ந்தது என்றும் ஆரியரது நாகரிகம் உலகியலை மறுப்பது என்றும் நாம் வரையறை செய்ய முடியும். நிலத்தோடும், நீரோடும், மண்ணோடும் உறவுடையவர்கள் திராவிடர்கள். உயிர்களோடும், பயிர்களோடும், உழைப்போடும், உறவுகளோடும், வளர்ந்தவர் திராவிடர், உழைப்பின்மூலம், சமூக உறவுகள் மூலம் உலகத்தை உள்வாங்கிக் கொண்டவர் திராவிடர்கள். திராவிடர்களுக்குச் சடங்குகள் இருந்தன. கடவுளரும் இருந்தனர்; உலகியலின் எல்லைக்குள் இவை இருந்தன.

சில உதாரணங்கள் கூறலாம். இரந்துதான் உயிர் வாழவேண்டும் என்று மனிதருள் சிலர் படைக்கப்பட்டிருப்பார்கள் என்றால், "அப்படிப் படைத்தவன் தானும் இரப்பை மேற்கொண்டு கெடுவானாக" என்று படைத்தவனைக் காய்கிறார் திருவள்ளுவர். மதுரை நகரம் தீப்பற்றி எரியும்பொழுது, மதுராபதித் தெய்வம் கண்ணகியின் பின் வந்து கெஞ்சிக் கேட்டுத் தீயிலிருந்து மதுரை நகரை விடுவிப்பதாக இளங்கோ அடிகள் கவிதை செய்திருக்கிறார். ஆபுத்தரனைத் தேவர் உலகிற்கு அழைக்கும்பொழுது இந்திரனை அந்தச் சிறுவன் கேட்டகேள்வி – 'தேவருலகில் வறியவர் உண்டா?' இத்தகைய கூற்றுக்களில் உள்ள கற்பனைக்கு அப்பால் நமக்குத் தெளிவாகத் தெரிவது, இந்தக் கவிஞர்களின் உலகியல் சார்பு.

சாங்கியம் தன் முதல் காலத்தில் கடவுளை ஒப்புக்கொள்ளவில்லை. பிற திராவிட மெய்யியல்களும் இறைவனை ஏற்கவில்லை. மேல் உலகம் இல்லையென்றாலும் கொடு என்பது வள்ளுவர் அறம். சங்க இலக்கியங்கள் மனிதர்களுக்கு இடையிலான காதலைப் போற்றின. மழையை நம்பி, மண்ணை நம்பி, உழைப்பை நம்பி வாழ்கிற மக்கள் துயரத்திற்கு

அஞ்சாதவர்கள். தம்மையும் பகிர்ந்து கொள்பவர்கள். மண்ணோடும், உழைப்போடும் உறவு அற்றவர்களுக்கு உலகம் வசப்படாது. வேள்விகள் என்றும் மந்திரங்கள் என்றும் அலைபவர் இவர்களே. இவ்வளவும் சொல்வதற்கு என்ன பொருள்? உலகத்தோடு ஒத்து வாழ்பவர் திராவிடர் தமிழர்.

ஒத்தது அறிவான் உயிர் வாழ்வான் என்றார் வள்ளுவர். உலகின் இயக்கத்திலிருந்து தன்னை இவன் விலக்கிப் பார்ப்பதில்லை. உலக நலத்தில்தான் தனது நல்வாழ்வு அடங்கியிருக்கிறது. ஏற்றத்தாழ்வுகள் இவனுக்கு உடன்பாடில்லை. உழைப்பின் விளைவை இவன் பகிர்ந்து கொள்கிறான். சமத்துவம் இவனுக்கு உயிர்ப்பண்பு உயிர் இனங்களை நேசிப்பவன் இவன். இவன் தொன்மையான மனிதன் வாழ்விற்குரிய இடமாக இவன் தான் உலகத்தை உருவாக்கினான். பிறரை அழித்துத் தன்னை இவன் வாழ்வித்துக் கொள்ள மாட்டான். பண்பு உடையவர்களால்தான் உலகம் இருக்கிறது என்பவன் இவன். இவனுக்குத் தற்பெருமை இல்லை ஆணவம் இல்லை. வரலாற்றின் சில கட்டங்களில் முள் மரங்கள் இவனுக்குள்ளும் முளைத்ததுண்டு. இவற்றின் தீங்கு அறிந்து களைந்து கொள்பவன் இவன். இவன் தன் சாயலில்தான் தெய்வங்களைப் படைத்தான்; தெய்வங்களோடு இவன் சமத்துவம் என்ற முறையில் உறவு கொண்டான்; தெய்வங்களைப் படைத்தவன் மனிதன்தான் என்ற உணர்வோடு, தெய்வங்கள் இல்லை என்றவனும் இவன்தான்; இத்தகையவன்தான் மண்ணுக்கு உரம் போன்றவன் உயிர் வாழ்வுக்கு உப்புப் போன்றவன் இவன்தான் மனிதன்; இவனைத்தான் தமிழன் என்று நம்மோடு உறவுப்படுத்திக் கொள்கிறோம்.

இவன் உலக நாகரிகத்திற்கு இன்றியமையாதவன். தறிகெட்டு ஆதிக்கங்களைப் பெருக்கி இவற்றின் விளைவாக இறுதியில் தன்னையும் அழித்துக் கொள்ள முந்துகின்ற அழிவுச்சக்திகளின் முன்னிலையில் இந்த மனிதன்தான் அன்பைச் சொல்பவன். உறவுகளின் தேவை குறித்துப் பேசுபவன். மண்ணையும், நீர்நிலைகளையும், காற்றையும், வானத்தையும் காத்து, நிற்பவன் இந்த மனிதன். இவன் வளர்த்த தமிழ் உலகத்திற்கு உயிர்ப்பைத்தரும்.

இப்பொழுது உறுதியாகச் சொல்லலாம். இந்தியாவைத் தமக்கு உரிமைப்படுத்திக் கொள்ளத் தகுதியுடையவர்கள் உழைக்கும் மக்கள்; இவர்களில் முதல் மரியாதைக்கு உரியவர்கள் உழவர்களும்;



கைவினைஞர்களும், பெண்களும் பழங்குடிகளும்; இவர்கள் வாழ்விற்கு ஆதாரமான மண்ணை, நீர்நிலையை, இயற்கையை, நாம் எவனுக்கும் விட்டுத் தரமுடியாது; இந்த மக்களுக்குத் தேசம் உரிமையுடையது இவர்களுக்கு ஆனதுதான் தேசம். இவர்களை அடிமைப்படுத்தி இவர்களின் உழைப்பையும், திறனையும், அழகையும், அறிவையையும் சுரண்டி, தமக்கான வரலாற்றை, தேசத்தை, படைத்துக் கொண்டவர்களை இவர்கள் ஏற்க முடியாது.

தமக்கான வரலாற்றை, தேசத்தை மீட்டுக் கொள்ளுவம்வரை இவர்கள் ஓய்ந்திருக்க முடியாது. விதியே தமிழ்ச்சாதியை என்செய்ய நினைத்தாய் என்று பாரதி ஒரு கவிதை எழுதியிருக்கிறார். அதில் தமிழ்ச்சாதி அமரத்துவம் உடையது, அழிவில்லாதது என்று சொல்லி, இதற்கு காரணமும் சொல்கிறார். வள்ளுவரின் திருக்குறளையும், இளங்கோவின் சிலப்பதிகாரத்தையும், கம்பரின் இராமாயணத்தையும் தோற்றுவித்தவனுக்கு அழிவு இருக்க முடியாது. திருக்குறள் சிலப்பதிகாரம் முதலியவற்றின் வழியே வெளிப்படுவது தமிழனின் அறம், மற்றும் நீதியை நிலை நிறுத்துவதற்காக உயிரைக் கொடுக்கும் புரட்சி உணர்வு; இவைதான் தமிழனை உலகில் வாழ வைக்கும். இத்தகைய அரியகுணம் கொண்டவன் வரலாற்றுக்கு, உலகத்திற்கு இன்றியமையாதவன்.

# 3. வரலாற்றில் தமிழன்

தொன்மையான நாகரிகமும் பண்பாடும் கொண்டது தமிழ்நாடு என்றாலும் தமிழகம் வரலாற்றில் தனக்குரிய இடத்தை தக்க வைத்துக் கொண்டது குறைந்த அளவுக்கு ஒராயிரம் ஆண்டுகளுக்கு மட்டுமே. எந்த ஒரு நாகரிகமும் உலகச்சூழலில் தன் எல்லைகளில் பெருஞ்சுவர் எழுப்பிக்கொண்டு தனித்து வாழமுடியாது. நாகரிகங்களின் கலப்பு என்பது வரலாற்றில் தவிர்க்க இயலாதது.

தனக்கெனத் தனித்திறனுடைய எந்த நாகரிகமும் வேற்று நாகரிகத்தின் மோதல் அல்லது ஊடுருவலின்போது தன்னைப் புதியதாய் உயிர்ப்பித்துக் கொள்ளக் கூடியதாகவே இருக்கமுடியும். நம் தமிழ் நாகரிகத்திற்கு இத்தகைய தனித்திறன் உண்டு என்பதில் ஐயம் இல்லை. வளமான மொழியும், இலக்கிய மேன்மையும், ஆதிப்பொதுமைச் சமூகம் தொடங்கி நீரோட்டமாய் வரும் பண்பாடும் கொண்ட தமிழ் நாகரிகம், சிற்சில காலங்களில், தான் மூடுண்டது போன்ற நிலவரங்கள் இருந்த போதிலும் மீண்டும் மீண்டும் தன்னை உயிர்ப்பித்துக் கொள்கிறது.

இந்தியா என்று சொல்லப்படுகிற தேசம் ஆங்கில ஆதிக்கத்தின் கீழ்தான் உருவாயிற்று / உருவாக்கப்பட்டது. இன்று வரையிலும்கூட ஒருங்கிணைந்ததாக இப்படி ஒரு தேசம் உருவாகிவிடவில்லை. இப்படித் தோற்றம் தரும் இந்தியா என்ற பெரும் நிலப்பரப்பின் தென்கோடியில் தமிழகம் அமைந்திருக்கிறது. மூன்று புறமும் கடல் சூழ்ந்து இருக்கிறது. வடதிசையில் தமிழகம் திறந்து கிடக்கிறது. இத்தகைய நிலப்பரப்பு காரணமாகத் தமிழ்மக்களுக்கு சில சாதகங்களும் சில / பல பாதகங்களும் வரலாற்றுக் காலங்களில் நேர்ந்திருக்கின்றன.

இந்திய நிலப்பரப்பு முழுவதும் பழங்காலத்தில் தமிழ் மக்கள் வாழ்ந்து செழித்த அடையாளங்கள் இந்தியாவெங்கும் பரந்து கிடக்கின்றன. இந்தியாவிற்கு வெளியில் இருந்தும், வடக்கிலிருந்தும் தெற்கு நோக்கியும் நிகழ்ந்த குடியேற்றங்கள் மற்றும் படையெடுப்புகள் காரணமாகத் தமிழக மக்கள் வாழ்ந்த நிலப்பரப்பின் எல்லைகள் சுருங்கின. ஆரியர் என்று சொல்லப்படும் வடக்கத்தியரின் ஊடுருவல் சில கூறுகளினேனும் நமக்கு நன்மையாக முடிந்திருக்கிறது. தமிழர்கள் / திராவிடர்களின் ஒத்துழைப்பால் வடக்கத்தியர் பெற்ற நன்மைகள் மிகப்பல. ஆரியர் மட்டுமல்லாமல் சமணர்களும் பௌத்தர்களும் தமிழகத்திற்கு வந்தனர். இவர்கள் சில கூறுகளினேனும் திராவிடப் பண்புகள் கொண்டவர். சங்ககாலத்து தமிழர்களின் எழுச்சிக்கு இத்தகைய நாகரிகக் கலப்புகள் ஒரு முதன்மையான காரணம்.



ஒரு வேளை நான்கு புறமும் கடல் சூழ்ந்ததாகத் தமிழகம் இருந்திருக்குமானால் தமிழகத்தின் வரலாறு வேறு விதமாய் இருந்திருக்கக்கூடும். மேற்கில் யவனர்களோடும் கிழக்கில் சீனர்களோடும் தமிழகம் கொண்டிருந்த தொடர்புகள் தமிழகத்திற்கு நன்மையைத்தான் செய்து இருக்கின்றன. வடக்கத்தியரோடு நாம் கொண்டிருந்த தொடர்புகளால் நமக்கு நேர்ந்தவற்றில் பாதகங்கள் அதிகமா அல்லது சாதகங்கள் அதிகமா என்ற விவாதம் இன்றுவரை தொடர்கின்றன. நடந்த வரலாற்றை நம்மால் ஒதுக்க முடியாது.

முதற்காலத்திலேயே ஆந்திரப் பகுதியில் சாதவாகனர் பேரரசு அமைத்திருந்தனர். வடக்கில் கடுமையான பூசல்கள் நேர்ந்தபோதெல்லாம் தெற்கு நோக்கி மக்கள் குடியேறினர். அண்மைக்கால வரலாற்றில் நேர்ந்திருப்பதைப் போன்ற தேசமென்ற அமைப்பு அக்காலத்தில் இல்லை. எத்தனையோ காரணங்களால் மக்கள் இடம் விட்டு இடம் பெயர்ந்தனர். இவர்களில் இனக்குழு மக்கள் மட்டுமல்லாமல் நாகரிகத்தின் ஏணியில் சில படிகளேனும் ஏறியவர்களும் இருந்தனர்.

அரசமைப்பு உருவாகிய பிறகு நடக்கும் படையெடுப்புக்கள் அதிக அளவில் அழிவு செய்யக்கூடியவை. இவற்றின் சாதகங்களையும் பாதகங்களையும் இன்றும் நாம் பார்க்கிறோம் / அனுபவிக்கிறோம். இஸ்லாமியர் வருகையும் ஆங்கிலேயர் வருகையும் தமிழகத்தைப் பாதித்த முக்கிய நிகழ்வுகள். தெலுங்கர்கள் மற்றும் கன்னடியர் பற்றியும் இன்று நாம் பேச நேர்ந்திருக்கிறது.

வரலாற்றில் முன்பே கூறியபடி மிக அண்மைக்காலங்களில், அதிகம் சொல்வதென்றால் கடந்த ஒரு நூற்றாண்டு அளவில்தான் தமிழத்தேசம். தமிழத்தேசிய இனம் என்ற கருத்து உருவாகி வருகிறது. கடந்த சில பத்தாண்டுகளில் மைய அரசின் அதிகாரப் பெருக்கம் காரணமாகவும் தொடர்ந்து தமிழகம் ஒதுக்கப்படுவதன் காரணமாகவும் தமிழத்தேசியம் என்ற கருத்துவலுப்பெற்று வருகிறது. விடுதலைப் போராட்டக் காலத்தில் இந்தியா ஒரு தேசம் என்ற கருத்தை ஏற்பதற்கு நாம் நெருக்கமாக இருந்தோம்.

மையத்தில் கூட்டாட்சி ஏற்படவில்லை. பெயரளவில் பேசப்பட்ட சோசலிசமும் நடைமுறைக்கு வரவில்லை. பம்பாய் முதலிய பெருநகரங்களை மையமாகக்கொண்டு வளர்ந்த முதலாளியம் இந்தியாவின் எத்தனையோ மாநிலங்களை தொடர்ந்து காலனிகளாக மாற்றி வருகிறது. 1947–ல் இந்தியாவை விட்டு வெளியேறியதாகத் தோன்றிய மேற்கத்தியரின் ஆதிக்கம் இன்று பலநூறு மடங்கு அதிகமாகப் பம்பாய் மற்றும் தில்லி வழியாக இந்தியாவை ஆக்கிரமிக்கிறது.

மேற்கத்திய நாகரிகத்தை பெருமளவிற்குத் திறனாய்வின்றித் தமிழினத் தலைவர்கள் ஏற்றுக்கொண்டனர். மேற்கத்திய நாகரிகம் குறித்து இன்று வரை நம்மில் பெரும்பாலானவருக்குத் திறனாய்வு இல்லை. முதலாளியம் குறித்தோ ஆங்கில ஆதிக்கம் குறித்தோ அறிவியல் தொழில்நுட்ப ஆதிக்கத்தின் விளைவாகத் தமிழகத்தின் இயற்கைச்சூழல் நாசமாவது குறித்தோ நம் தலைவர்களுக்கு எதிர்ப்பு உணர்வு என்பது சிறிதளவும் இல்லை. 15 சத அளவில் மட்டுமே உள்ள மத்தியதரப் படிப்பாளிகள் தான் பிற பெரும்பகுதி மக்களின் வாழ்வு முதலியவற்றை நிர்ணயம் செய்யக் கூடியவர்களாக இருக்கின்றனர். முதலாளிகளோடும், அரசு மற்றும் கட்சி அதிகாரிகளோடும் நடுத்தர வர்க்கப் படிப்பாளிகள் ஒத்துழைக்கின்றனர். மேற்கத்தியரின் ஆதிக்கத்திற்கும் இவர்கள் தாராளமாக இடம் கொடுக்கின்றனர்.

இன்றைய நிலையில் நாகரிகம் என்பதோ தேசம் என்பதோ வரலாறு மற்றும் பொருளியல் என்பதோ இவர்களின் உடைமைகளாக / உரிமைகளாகத்தான் இருக்கின்றன. மக்களின் தேசம் அல்லது வரலாற்றை இவர்கள் தான் தம் வசப்படுத்தி உள்ளனர். ஆரியர் படையெடுப்பு குறித்து இவர்கள் பேசும் அளவுக்கு ஆங்கிலேயர் ஆதிக்கம் பற்றி பேசுவதில்லை. வடக்கத்தியரின் ஆதிக்கம் என்று இவர்கள் பேசுமளவிற்குத் தமிழ்மக்களின் மீது இவர்கள் செலுத்தும் ஆதிக்கம் குறித்துப் பேசுவதில்லை. எத்தனையோ வகைகளில் மக்கள்மீது சுரண்டலையும் ஒடுக்குமுறைகளையும் இவர்கள் செய்து வருகிறார்கள். இவர்களின் பெரும்பகுதியினர் மைய அரசின் ஆதிக்கத்தோடும் ஒத்துழைக்கின்றனர்.

தமிழக மக்களின் விடுதலைக்கான போராட்டங்களை நசுக்குபவர்களும் நாசப்படுத்துபவர்களும் இவர்கள்தான். கடவுள்களும் புரோகிதர்களும் மக்களுக்குள் மூடநம்பிக்கைகளைத் திணிப்பதை இவர்கள் ஓயாமல் எடுத்துச் சொல்லுகிறார்கள். அதேசமயம் அறிவியல் என்றும்



ஆங்கிலம் என்றும் அரசியல் மற்றும் பொருளியல் என்றும் மருத்துவம் என்றும் இவர்கள் திணிக்கும் மூடநம்பிக்கை குறித்து இவர்கள் பேசுவதில்லை. எல்லாவற்றையும் இவர்கள் மூடிமறைத்து விடுகிறார்கள். திரைப்படங்கள் பத்திரிக்கைகள்மூலமாகவும் இவர்கள் இதைத்தான் செய்கிறார்கள்.

இவர்களின் ஒத்துழைப்போடுதான் லாட்டரி சீட்டுகளும், மதுக்கடைகளும், சுயநிதி நிறுவனங்களும் கல்வி நிறுவனங்களும் நடைபெறுகின்றன. மக்களுக்குத் தரமான கல்விதர இவர்கள் எந்த முயற்சியும் செய்வதில்லை. நாகரிகம் என்ற போதைக்குள் மக்களைத் தள்ளுபவர்களும் இவர்களே. இப்படியெல்லாம் செய்வதன்மூலம் மக்களைத்தம் அரசியல் ஆதிக்கத்திற்கும் சுரண்டலுக்கும் ஒத்தபடி வைத்திருக்கிறார்கள். தொலைக்காட்சிகளையும்கூட இவர்கள் வசப்படுத்தி வைத்திருக்கிறார்கள். மக்களின் நலன்களுக்காக மட்டுமே தாங்கள் உயிர்வாழ்வதாகச் சொல்லி மக்களை நம்பவைப்பதிலும் இவர்கள் வெற்றி பெற்றிருக்கிறார்கள்.

தொடர்ந்து எல்லா களங்களிலும் ஊழல்களைப் பெருக்கி மக்களின் இயல்பான அற உணர்வை அழிப்பதிலும் இவர்கள் பெருமளவிற்கு வெற்றி பெற்றுள்ளார்கள். இவர்களுக்குத் தமிழ் தேவையில்லை. தமிழுக்குள் உறைந்திருக்கும் ஆற்றல்களை இவர்கள் கண்டுகொள்ள மாட்டார்கள். இவர்கள் வாயளவில் திருக்குறளைச் சொல்லுவார்கள். திருக்குறளின் அறத்தை இவர்கள் வளர்க்க மாட்டார்கள்.

இப்பொழுது தமிழக வரலாற்றின்மீது ஒரு மறுபார்வையைச் செலுத்துவோம். சிலப்பதிகாரத்தில் வடநாட்டின்மீது சேரன் செங்குட்டுவன் படையெடுத்ததாக இயளங்கோவடிகள் செய்த கற்பனையை இன்றும் நம்மவர் போற்றுகின்றனர். பாராட்டுகின்றனர். இமயத்தில் கொடி ஏற்றினான் என்று புகழ்ந்துரைக்கின்றனர். கடாரம் கொண்டான், கங்கை கொண்டான் என்று சில மன்னர்களைப் பாராட்டுகின்றனர். இப்படி மன்னர்கள் என்றும் அவர்களின் படையெடுப்புகள் என்றும் அவர்களின் ஆடம்பர வாழ்க்கை என்றும் இன்றும் நாம் பெருமை பேசுகிறோம். தொன்மை என்பதற்காகவே நாம் பெருமை பேசுகிறோம். தமிழ் நாகரிகம்கூட ஒரு காலத்தில் தேவையான பெருமிதம் என்று தொடங்கி நம் அறிவையும், பண்பாட்டையும் அழிக்கும் ஆணவமாக மாற்றியதை நாம் உணரவில்லை. இன்றும் செல்வச் செழிப்பு மிக்கவர்களின் பரிசும் பாராட்டும்

பெறுவதில் நம்மவர் ஓய்வதில்லை. இராணுவம் தேவையென்றும், படையெடுப்பு தேவையென்றும் இன்றும் நாம் பேசுகிறோம். நமக்கும் அணுஆயுதம் தேவை என்கிறோம். அணுமின்விசை இல்லாமல் நமக்குத் தொழில் வளர்ச்சி இல்லை என்கிறோம். கூடங்குளம் இல்லாமல் தொழில் வளர்ச்சி சாத்தியமில்லை என்கிறோம்.

வரலாற்றின் வழியேயும் நமக்குள் வந்து தங்கிவிட்ட ஆதிக்கவாதிகள் குறித்து பெருமையுணர்வோடு பேசுகிறோம். பெரியாருக்கும், மார்க்சுக்கும்கூட இன்று புரோகிதர்கள் பெருகிவிட்டார்கள். பணமும், பதவியும், அதிகாரமும் கட்சியும்கூட இன்று கடவுளாகிவிட்டன. ஆங்கிலேயனும், அமெரிக்கனும் இன்று நமக்குள் உறுதியான பீடம்போட்டு அமர்ந்திருக்கின்றனர். நம் தலைவர்களும் நமக்குள் வழிபடு தெய்வங்களாகி விட்டனர். நாம் சிறுத்துப் போய்விட்டோம்.

நமக்குள் இன்றும் உயிர்ப்பு இருப்பதால்தான் இப்படிப் பேசுகிறோம். வரலாற்றின் வழியே கோணல் மாணலாகி வடிவம் சிதைந்துபோன நம் தமிழ் முகத்தை நாம் மீட்டுக் கொள்ளத்தான் வேண்டும். வள்ளுவரையும் இளங்கோவையும் பாரதியையும் பாரதிதாசனையும் நம் உழவர்களையும், பெண்களையும் நம் குழந்தைகளையும், ஏன் நம்மையும் அந்நியரின் ஆதிக்கத்திற்கு விட்டுதர முடியாது.

ஆரியன் நமக்குள் சாதியை திணித்தான் என்கிறோம். திராவிடனின் ஒத்துழைப்பில்லாமல் சாதி நமக்குள் இறுகவில்லை. ஆங்கிலேயன் இங்கு அதிகாரத்தை நிறுவினான் என்பதுகூட தமிழ்மக்களின் ஒத்துழைப்போடுதான். பாரி முதலிய நல்லவர்களை மூவேந்தர்கள் தீர்த்துக் கட்டினர். சிலப்பதிகாரத்தில் நாம் கண்டபடி பாண்டியன் நீதி தவறியதைச் சான்றோர்கள் மட்டுமல்லாமல் தெய்வங்களும் பார்த்துக் கொண்டுதான் நின்றனர். இன்று இருக்கும் இராவணர்களை அழித்தொழிப்பது குறித்து இராமபக்தர்கள் பேசுவதில்லை. அதிகாரத்தோடு ஒத்துழைப்பதன் மூலம் நம்மை நாமே அழித்து கொள்கிறோம். தமிழைச் சொல்லியும் தமிழனை அடிமைப்படுத்த முடியும் என்பதை நம் கால வரலாறு மெய்பித்திருக்கிறது. இப்படித்தான் முன்னைய வரலாற்றைப் படிப்பதன் மூலம் நமக்கான எதிர்கால வரலாற்றைப் படைத்துக் கொள்ள முடியும்.



# 4. தமிழ் வரலாற்றில் சமதருமம்

பழங்கால வரலாறு குறித்துப் பார்வையை நிகழ்காலம் மற்றும் எதிர்காலத் தேவைகள்தான் தீர்மானிக்கின்றன என்பது வரலாற்று வரைவியலில் ஓர் அடிப்படையானக் கருத்து. தமிழர்களுக்குச் சாதி இல்லை, மதம் இல்லை என்பது போன்ற திராவிட இயக்கத்தின் கருத்தும் இப்படிப்பட்ட ஒன்றுதான். பழங்காலம் முதலே தமிழன் தனக்கென ஆட்சியையும் வரலாற்றையும் நகர நாகரிகத்தையும் கொண்டிருந்தான் என்பது போன்ற திராவிட முன்னேற்றக் கழகச் சார்பினரின் கருத்தும் இப்படிப்பட்டதுதான். இத்தகைய கருத்துகளில் இருந்து வேறுபட்ட பார்வை உடையவர் மார்க்சியர்.

வரலாறு என்பது வர்க்கப் போராட்டங்களின் வரலாறுதான் என்று நம்பும் இவர்கள் சங்க காலத்திற்குள் ஒரு பொற்காலத்தைக் காணவில்லை. வள்ளுவர், இளங்கோ முதலியவர்கள் அக்காலத்திய ஆதிக்கக் கருத்தைத்தான் வெளிப்படுத்தினர். தமிழ்ப்பண்பாட்டு மேன்மை குறித்து இன்று பேசுவதில் பொருளில்லை இவ்வாறெல்லாம் மார்க்சியர் கருதினர். இவர்களுக்குள் மார்க்சியம் ஒரு இறக்குமதிச் சரக்காகத்தான் இருந்தது. மேற்குலகம்தான் மார்க்ஸைத் தோற்றுவித்தது. கிழக்குலகில் மார்க்சியத்திற்கு நிகரான வெளிச்சங்கள் இல்லை என்று இவர்கள் உறுதியாக நம்பினர்.

சங்க காலத்தில் நடைபெற்ற வர்க்கப் போராட்டங்களை சங்க இலக்கியம் நமக்குத் தெளிவாகவே காண்பிக்கிறது. பாரி முதலியவர்கள் தமக்கென எதையும் வைத்துக் கொள்ளவில்லை . எல்லாவற்றையும் மக்களோடு பகிர்ந்து கொண்டனர். மருத நிலம் சார்ந்தவர்களாகவும் நால்வகை படை உடையவர்களாகவும் அரசு அதிகாரத்தை விரிவுபடுத்துபவர்களாகவும் செயல்பட்ட மூவேந்தர், பாரி முதலியவர்களை ஒழித்துக் கட்டினர். கோப்பெருஞ்சோழன் வறியர்களுக்கும், புலவர்களுக்கும், எல்லாவற்றையும் கொடுத்தது கண்டு அவன் மக்களே அவன்மீது போர் தொடுத்தனர். பொத்தியார் முதலிய சான்றோர்களின் அறிவுரைகேட்டு கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர்நீத்தான். குமணனுக்கு எதிராக இளங்குமணன் கிளம்பினான். தன் தோட்டத்திலிருந்து விழுந்த மாங்கனியை ஆற்றில் குளித்துக் கொண்டிருந்த இளம்பெண் கண்டு எடுத்து உண்டாள். எவ்வளவோ

செல்வத்தை அந்த மாங்கனிக்கு ஈடாக அவள் தந்தை தர விரும்பியபோதும் நன்னன் உடன்படாமல் அப்பெண்ணைக் கொன்றான்.

இன்னும் இவை போன்ற உண்மைகள் எதை மெய்ப்பிக்கின்றன? தமிழ்ச் சமூகத்தை உடைமையும் அதிகாரமும் பிளந்து கொண்டிருந்தன. இந்தப் போக்கைச் சான்றோர் ஒப்புக்கொள்ளவில்லை. இந்தப் போக்கோடு ஒத்துழைக்க விரும்பாமல் தம் உயிர் துறக்கவும் சான்றோர் விரும்பினர்.

வரலாற்றுக்கு முற்பட்டது என்ற ஆதிப்பொதுமைச் சமூகம் பற்றி மார்க்சியர் கூறுகின்றனர். அந்தச் சமூகத்தில் மக்கள் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தனர். இயற்கையில் கிடைக்கும் உணவுப் பொருட்களைச் சேகரித்தோ வேட்டையாடியோ வாழ்ந்தனர். கிடைத்தவற்றை தமக்குள் பகிர்ந்து கொண்டனர். தமக்குள் ,அவர்கள் முரண்படவில்லை. சமூகத்தில் ஏற்ற தாழ்வுகளும் உடைமையும் அரசும் தோன்றிய நிலையிலும் முன்னைய ஆதிப் பொதுமைச் சமூகத்தின் பண்புகள் / பண்பாடு இந்தப் புதிய சமூகச் சூழலிலும் மக்களிடம் தங்கியிருக்கத்தான் செய்தது.

பாரி முதலியவர்களை இவர்கள் கொண்டாடினர். புதியதாக வந்த அரசுகளின் படைகளை எதிர்த்து வீரப்போர் நடத்தினர். இதைத்தான் வீரயுகம் என்றும் அறிஞர்கள் பெயரிட்டுள்ளனர். 'இனி பாடுநரும் இல்லை. பாடுநர்க்கு ஒன்றும் ஈகுநரும் இல்லை இவ்வாறு ஔவையார் முதலியவர் புலம்பினர். "செல்வத்துப் பயனே ஈதல், துய்ப்போம் எனினே தப்புந பலவே" என்று நக்கீரர் கண்டு உரைத்தார். இத்தகைய சோகங்கள் சங்க இலக்கியங்களில் ஏராளமாகப் பதிவு பெற்றுள்ளன. செல்வமும் பண்பாடும் முரண்பட்ட இரு வேறு உலகங்கள் குறித்து வள்ளுவர் பேசியதை வேறு எப்படி நாம் புரிந்து கொள்ள இயலும்?

இந்த ஆதிப் பொதுமைச் சமூகத்தின் பண்பாட்டைத் தம் உள்ளத்தில் கொண்டுதான் வள்ளுவர், இளங்கோ முதலியவர்கள் நீதி உரைத்தனர். வள்ளுவரையும், இளங்கோவையும் தனியுடைமை மற்றும் அரசு ஆதிக்கத்திற்கு எதிரானவர் என்று மதிப்பிடுவதுதான் மார்க்சியத்திற்கு ஒத்த மதிப்பீடாக இருக்க முடியும். ஆதிப் பொதுமைச் சமூகம் முதற்கொண்டு அழிவுறாமல் சமுதாயத்தில் அடி ஆழத்தில் நீரோட்டம் போலத் தொடரும் இந்தப் பண்பாட்டில்தான் தமிழ் இலக்கியங்கள் செழித்தன / சமணர்களும், பௌத்தர்களும் இத்தகைய பண்பாட்டைத்தான் மேம்படுத்தினர். தமிழ் வரலாறு முழுவதும் – இன்றுவரை தொடரும் இந்த



பண்பாட்டிற்குத்தான் இன்று நாம் சமனியம் / சமதர்மம் என்று பெயர் கொடுக்கிறோம்.

களப்பிரர் காலம் குறித்து இங்குசில விவரங்களைப் பார்ப்போம். களப்பிரர் காலத்தைத் தமிழகத்தின் இருண்ட காலம் என்று இன்றும் சிலர் கருதுகின்றனர். இதை மறுக்கும் முறையில் எவ்வளவோ சான்றுகளை பேராசிரியர் க.ப. அறவாணன் முதலிய அறிஞர்கள் எடுத்துக் காட்டுகின்றனர். இருண்ட காலம் எனச் சொல்லப்படும் இந்த நூற்றாண்டுகளில்தான் திருக்குறளும், சிலப்பதிகாரமும், மணிமேகலையும் எழுந்தன. நாலடியார் முதலிய அறநூல்கள் எழுந்தன. மதுரையில் சங்கம் வைத்து தமிழாய்வு நடைபெற்றதும் இந்தக் காலத்தில்தான். சங்க இலக்கியங்கள் தொகுக்கப்பட்டதுகூட இந்த நூற்றாண்டுகளில்தான். திருமந்திரம் இந்த நூற்றாண்டுகளுக்கு உரியதுதான்.

இந்த உண்மைகளைப் பார்க்கும்போது இந்த நூற்றாண்டுகளில் தமிழகத்தில் மிகத் தீவிரமான மாற்றங்கள் ஏற்பட்டிருக்க வேண்டுமென்பது நமக்குப் புரிகிறது. இந்தக் காலத்தில் சேரனும் இல்லை. சோழனும் இல்லை, பாண்டியனும் இல்லை இவர்களெல்லாம் எங்கே போனார்கள் என்பது தெரியவில்லை. இவர்களையெல்லாம் தமிழக வரலாற்றிலிருந்து களப்பிரர் ஒதுக்கினர் என்று கூறுகிறார்கள். திருக்குறளில் மூவேந்தர்களின் பெயர் இல்லை. தலைநகரங்கள் குறிப்பிடப்படவில்லை. மக்களைக் கொள்ளையடிக்கும் மன்னர்கள் பற்றி வள்ளுவர் குறிப்பிடுகிறார். மக்கள் அழுத கண்ணீர் அரசை அழிக்குமென்கிறார் வள்ளுவர். மதுரை நகரம் அழிந்த செய்தியை சிலம்பு கூறுகிறது. மன்னனும் சேர்ந்தே அழிந்தான். புகார் அழிந்த செய்தியை மணிமேகலை கூறுகிறது. மணிமேகலையைக் கடத்திப் பெண்டாள நினைத்த இளவரசன் கொல்லப்படுகிறான். வறுமை காரணமாக களவு, கொலை முதலியவற்றில் ஈடுபட்டவர்கள் சிறையில் அடைபட்டு இருக்கிறார்கள். புகார் நகரத்தோடு கொற்கை முதலிய துறைமுகங்களும் அழிந்தன. சிலம்பில் அரசன் இறந்த பிறகு இருளில் நாடு மூழ்கியது குறித்த உவமைகள் பலமுறை இடம் பெறுகின்றன. இந்த மெய்மைகள் களப்பிரர் காலத்தை தான் குறிப்பிடுவதாக நாம் கருத முடியும்.

மேலும் ஒரு முக்கியமான குறிப்பை தளவாய் புரச் செப்பேட்டிலிருந்து நாம் அறிகிறோம். முன்பு பாண்டியன் மக்களிடமிருந்து இரண்டு கிராமங்களைப் பறித்து பார்ப்பனர்களுக்கு வழங்கியிருந்தான். ஆனால் களப்பிரர், பார்ப்பனர்களிடமிருந்து அந்தக் கிராமங்களை எடுத்து

அவர்களின் உரிமையாளர்களுக்கு வழங்கினர். ஆறாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் மீண்டும் அரசுப் பதவிக்கு வந்த பாண்டியன், சூத்திரர்களிடமிருந்து கிராமங்களைப் பறித்துப் பார்ப்பனர்களுக்கு வழங்கினான். இந்தச் செய்தியை தளவாய்புரச் செப்போடு கூறுகிறது. அனேகமாக இந்தக் குறிப்பு தமிழக வரலாற்றில் ஒரு பெரும் வெளிச்சத்தை வீசுகிறது. தனியுடைமை மற்றும் அரசதிகாரத்தை தீவிரப்படுத்த முனைந்த மூவேந்தருக்கு எதிராக ஒரு பெரும் கலகம் இந்த காலத்தில் நடைபெற்றிருக்க வேண்டும். நகரங்கள் தீயிடப்பட்டன. அரசர்கள் கொல்லப்பட்டனர். சிறைச்சாலைகள் தகர்க்கப்பட்டன. நிலங்களை அவற்றிற்குரியவர்கள் மீட்டுக் கொண்டனர். களப்பிரரும் இன்னும் சில குழுவினரும் ஆட்சி அமைத்திருக்க வேண்டும். இவர்கள்தான் புதிய அறங்களை நிறுவ முயன்றிருக்க வேண்டும். சங்க இலக்கியங்கள் கூறிய மேன்மையான பண்பாட்டை தக்கவைக்கும் பொருட்டு நூல்களை தொகுப்பதற்கும் ஆராய்வதற்கும் இவர்கள் சங்கத்தை நிறுவியிருக்க வேண்டும். இவர்கள் சமணத்தையும், பவுத்தத்தையும் சார்ந்தவர்கள். இவர்கள் தமிழ்ச் சமூகத்தை புதுப்பித்தவர்கள் இப்படிப் பார்க்கும்பொழுது களப்பிரர்களையோ, சமணர்களையோ நாம் அன்னியர்களென்று கருத வேண்டியதில்லை. தொல்காப்பியரும், திருவள்ளுவரும், இளங்கோவும், சமணர்கள். சாத்தனார் பவுத்தர். இவர்கள்தான் அசலான தமிழர்கள். பரத்தமையும், கள்ளும், ஊனும் பெருத்த உடைமை சமூகத்திற்கு இவர்கள் எதிரானவர்கள்.

களப்பிரர்களின் ஆட்சிக்காலம் 2 அல்லது 3 நூற்றாண்டுகளுக்கு மேல் நீடிக்கவில்லை. மீண்டும் தனியுடைமையும் அரசதிகாரமும் ஆதிக்கத்திற்கு வந்தன. இதன் தொடக்க காலத்தில்தான் சில நாயன்மார்களையும், ஆழ்வார்களையும் பார்க்கிறோம். சமூக உணர்வோடு செயல்பட்டவர்கள் இவர்கள். பிறகுதான் தனக்குள் இறுகியதாக சைவம் வளர்ந்தது. சமணர்களும், பவுத்தர்களும் ஒழிக்கப்பட்டனர். இந்த இடைக்காலத்தின் ஒரு கட்டத்தில் வைணவத்தின் பேரெழுச்சியை நாம் காணத்தான் செய்கிறோம். சமூகத்தின் அடித்தளத்திலிருந்த மக்கள் சார்ந்த எழுச்சியாக இது வெளிப்பட்டது. (இது குறித்து பிறகு பார்க்கலாம்) களப்பிரர்களையும், சமணர்களையும் பவுத்தர்களையும் வீழ்த்திய நிலையில் தமிழகத்தில் மீண்டும் வேந்தர்களின் ஆளுகை ஏற்பட்டது. இவர்கள்தான் வடக்கிலிருந்து பார்ப்பனர்களைத் தமிழகத்தில் குடியேற்றினர்.

இந்த இடத்தில் இந்திய வரலாறு குறித்து டாக்டர் அம்பேத்கர்



கூறிய கோட்பாட்டைக் குறிப்பிட வேண்டும். சமூகத்தின் ஆதிக்கத்தைக் கைப்பற்றும் நோக்கில் இந்திய வரலாற்றின் தொடக்க காலத்தில் பார்ப்பனரும், சத்திரியரும் தமக்குள் முரண்பட்டு போரிட்டனர். இருவரும் அழியும் நிலையில் பிற சமூகத்தினர் மேலுக்கு வருவது கண்டு தமக்குள் உடன்பாடு கண்டனர். இப்படித்தான் சமூகத்தின் தலைமையை இவர்கள் நிறுவிக் கொண்டனர். தனியுடைமையும், அரசதிகாரமும் கருத்தியலோடு கைகோர்த்துக் கொண்டதன் மூலமே இந்தியச் சமூகத்தின் மீது இவர்கள் தம் ஆதிக்கத்தை நிறுவினர். இவர்கள் தனித்தனியே இவற்றைச் செய்ய முடியாது. இதுதான் இந்திய வரலாற்றைப் புரிந்து கொள்வதற்கான திறவுகோல், தமிழகத்திற்கும் இது பொருந்தும்.

களப்பிரர் ஆட்சிக்குப்பிறகு எழுச்சி பெற்ற வேந்தர்கள் வடக்கிலிருந்து பார்ப்பனரை அழைத்து தமிழகத்தில் குடியேற்றினர். வேந்தர்களுக்கும் மக்களுக்கும் இடையிலிருந்த இடைவெளியில்தான் பார்ப்பனர் இடம் பெற்றனர். (சைவ சமயமும் இந்த இடத்தில்தான் அமர்ந்தது) இப்படித்தான் தமிழக மக்கள் மீது பார்ப்பனரின் ஒத்துழைப்போடு சோழர் தம் ஆதிக்கத்தை நிறுவனர். பார்ப்பனர் தனித்திருந்து இப்படிச் செய்ய முடியாது. உடைமையும், அரசதிகாரமும், கருத்தியலும் கைகோத்த நிலையில் மக்கள் மீது இவர்கள் அமர்ந்தனர். இந்த வரலாறு இன்றுவரைத் தொடர்கிறது. களப்பிரர் காலத்தில் ஆதிப்பொதுமைச் சமூகத்தின் அறம் மேலுக்கு வந்தது. சங்க இலக்கியங்களில் தலைதூக்கி நின்ற இந்த அறம் சித்தர்கள் வழியாகவும் வள்ளலார், பெரியார், பாரதி, பாரதிதாசன் முதலியவர்கள் வழியாகவும் இன்றும் நமக்குள் வாழ்கிறது. மார்க்சியத்தின் வழியே தமிழக வரலாற்றை இப்படித்தான் நாம் புரிந்து கொள்கிறோம். புதுப்பிக்க விரும்புகிறோம். இந்தச் சமதர்மம்தான் அசலானத் தமிழனின் முகத்தில் ஒளிரும் அறம்.

# 5. தமிழ்ச் சித்தர்கள்

வேதங்களை ஆழமாக ஆய்ந்தவர்களில் குறிப்பிடத்தக்கவர் அறிஞர் அம்பேத்கர் அவர்கள். உலகத் தோற்றம், உயிர்களின் தோற்றம் முதலியவற்றிற்கு மூலம் இறைவன் என்ற கருத்து வேதங்களில் காணப்படுகிறது என்பது பலரும் ஒப்புக் கொண்ட ஒரு கருத்து. ஆனால், இறைவன் முதலிய அனைத்துக் கருத்துக்களுக்கும் மனிதன்தான் மூலம் என்ற கருத்தும் வேதங்களில் இடம் பெற்றிருக்கிறது என்கிறார் அம்பேத்கர். இது சிறுபான்மைக் கருத்துதான் என்றும் அவர் கூறுகிறார்.

இந்தியாவின் தொன்மையான தரிசனங்கள் என்று சொல்லப்படுகிற சாங்கியம், வைசேடிகம், யோகம் ஆகியவற்றிலும் சமணம், பௌத்தம் ஆகிய வேதமறுப்பு மெய்யியல்களிலும், சார்வாகத்திலும் கடவுள் என்ற உண்மை ஏற்கப்படவில்லை. இப்படிச் சொல்வதற்குக் காரணம் இந்திய மெய்யியலில் தொடக்ககாலம் முதலே பார்ப்பனியம் என்று சொல்லப்படுகின்ற கருத்திற்கு எதிர்க் கருத்தொன்றும் இருந்து வந்தது என்பதைச் சுட்டுவதற்குத்தான். இக்கருத்தின் திராவிடச் சார்பும் நாம் ஏற்கத் தக்கதுதான்.

எட்டாம் நூற்றாண்டு வாக்கில் முன்பு கடவுளை மறுத்த மெய்யியல்கள் என்று அறியப்பட்ட சாங்கியம் முதலியவை கடவுட்கருத்தை ஏற்றுக்கொண்டது பற்றி அறிஞர் / தேவிபிரசாத் சட்டோபாத்யாய அவர்கள் விரிவாக ஆராய்ந்துள்ளார். இக்காலத்தில்தான் புத்தரும், அருகனும் கடவுள் நிலைக்கு உயர்த்தப்பட்டார்கள் என்றும் அவர் கூறுகிறார்.

இதிலிருந்து நாம் அறியக்கூடிய உண்மை ஒன்றுண்டு. கடவுள் என்று ஒரு கருத்து சொல்லப்பட்ட உடனே அதை மறுப்பதே முற்போக்கு ஆகிவிடாது. அந்தக் கருத்தின் சமூகவியல் சார்பைக் குறித்து நாம் ஆராய்ந்து மதிப்பிட வேண்டும். கடவுள் என்ற கருத்தையும் தோற்றுவித்தவன் மனிதன்தான் என்ற அடிப்படையிலிருந்து இந்த ஆய்வை நாம் தொடங்க வேண்டும்.

இனி தமிழ் மக்களின் கடவுட்கொள்கை குறித்து சிலவற்றைச் சொல்லலாம். உலகின் முதற்பொருள் நிலமும் பொழுதும் என்று தொல்காப்பியர் கூறுகிறார். முதற்பொருள் என்பது மூலப்பொருள். நிலம், பொழுது (காலம்) ஆகியவற்றின் இயக்கத்தின் போது தோன்றுவன



கருப்பொருள்கள். பறவை, விலங்கு முதலியவை இவ்வாறு தோன்றும் கருப்பொருள்கள். கருப்பொருள்களில் ஒன்றாக தெய்வத்தை வைக்கிறார் தொல்காப்பியர். இதிலிருந்து நாம் அறிந்து கொள்வது கடவுள் என்ற கருத்து, மனிதக் கருத்துத்தான். தொல்காப்பியர் சமணர் என்பதையும் நாம் இங்கு குறிப்பிட வேண்டும்.

தலைவன், தலைவி ஆகியவரைக் கூட்டி வைப்பது பால்வரை தெய்வம் அதாவது விதி என்று தொல்காப்பியர் கூறி இருக்கிறார். புறநானூற்றில் பக்குடுக்கை நன்கணியார் எழுதிய பாடலொன்றில் படைத்தவன் பண்பிலான் என்று காய்கிறார். ஒரு தெருவில் ஒரு வீட்டில் மணப்பறை முழுங்க, அதே தெருவில் இன்னொரு வீட்டில் சாப்பறை ஒலிப்பது கண்ட புலவர், இப்படி உலகைப் படைத்தவன் பண்பற்றவன் என்கிறார். கடவுளை ஒப்புக்கொள்ளும் அவர் கடவுளைக் கேள்விக்குட்படுத்தவும் செய்கிறார். இத்தகைய கேள்விகள் சங்க இலக்கியங்களில் அங்கங்கே இடம் பெறுகின்றன. திருக்குறளிலும், 'இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின், பரந்துகெடுக இவ்வுலகியற்றியான்' என்று வள்ளுவர் கூறும் பொழுது, உலகில் வறுமையைப் படைத்தவன் எப்படி இறைவனாக இருக்க முடியும் என்ற கேள்வியை நமக்குள் எழ வைக்கிறார்.

வள்ளுவர் இறைவனை ஒப்புக் கொண்டவர் என்று தான் கருத வேண்டி உள்ளது. இறைவனை 'வாலறிவன்' என்றும் 'வேண்டுதல் வேண்டாமை இலான்' என்றும் 'ஐந்துவித்தான்' என்றும் வள்ளுவர் குறிப்பிடுவதை நாம் கவனிக்க வேண்டும். தூய்மையான அறிவும், விருப்பு வெறுப்பற்ற மனநிலையும், புலன்களில் அடக்கமும், மனிதன் தனக்கு வகுத்துக் கொள்கிற இலட்சியங்கள். உலகில் வறுமை தேவையில்லை. உலகம் இரண்டுபட்டுவிடக் கூடாது என்ற மனித உணர்வின் உள்ளடக்கத்தைக் கடவுள் கருத்தினுள் நாம் காண முடியும்.

கடவுள் என்பது மனிதச் சமூகம் படைத்துக் கொண்ட ஒரு கருப்பொருள். வாழ்வின் உன்னதம் என்ற உள்ளுறை கடவுள் கருத்தினுள் அடங்கியுள்ளது. கடவுள்தான் நன்மை, தீமை உட்பட எல்லாவற்றையும் படைத்து, எல்லா உயிர்களையும் இயக்குகிறார் என்பது மனித ஆக்கத்தை மறுக்கிற கருத்து. இவ்வகைக் கருத்தை ஆரியத்தோடு சார்ந்துச் செல்ல முடியுமானால், இதற்கு எதிரான கருத்தை திராவிட / தமிழ்க் கருத்தென்று நாம் சொல்ல முடியும்.

சிலப்பதிகாரம் இந்தக் கருத்தைத் தெளிவுபடுத்துகிறது. மழை பெய்யவில்லை என்றால் தானமும் இல்லை. தவமும் இல்லை. அதாவது இல்லறமும் இல்லை, துறவறமும் இல்லை என்று வள்ளுவர் கூறும்பொழுது மழை என்பதை இறைநிலைக்கு உயர்த்துகிறார். இளங்கோவடிகளும் கதிரவனையும், திங்களையும், மழையையும் போற்றித் தன் காப்பியத்தைத் தொடங்குகிறார். இயற்கைதான் நம்மை வாழ்விக்கிறது என்பதில் ஐயமில்லை. தொடக்க காலத்தில் காணப்படும் இக்கருத்தினுள் இறை என்ற கரத்து இணைந்ததிலும் வியப்பில்லை.

இயற்கை நிகழ்வுகள் முதலியவற்றைப் பொருள்முதல்வாத நோக்கில் தொடர்ந்து விளக்க முடியாத பழங்காலச் சூழலில் தான் நாளடைவில் இறை என்ற கருத்து ஆளுகை பெறுவதை நாம் புரிந்து கொள்ள முடியும். அந்த நிலையிலும் இறைவனை நோக்கி மனிதன் கேள்விகளை எழுப்பிக் கொண்டிருந்தான்.

கோவலன் நீதியற்ற முறையில் கொல்லப்பட்டான். பாண்டியனின் அரசவை நோக்கி கையில் சிலம்போடு கண்ணகி விரைகிறாள். அப்பொழுது கண்ணகிக்குள் சில கேள்விகள். அநீதி ஆட்சி செய்கிற இந்நகரத்தில் தெய்வங்கள் இருக்க முடியுமா? சான்றோர் இருக்க முடியுமா? கற்புடைய பெண்கள் இருக்க முடியுமா? இக்கேள்விகளுக்கு உட்பொருள் என்ன? தெய்வம் இருக்கும் என்றால் நீதி நிலைபெற வேண்டும். நீதியைக் காப்பாற்ற முடியாத தெய்வம், தெய்வமாக இருக்க முடியாது. அநீதியை இழைத்தவன் பாண்டியன். அதைப் பார்த்துக் கொண்டு இருந்த தெய்வம், தெய்வமன்று. இங்கும் தெய்வமென்ற கருத்தும், அறம் என்ற கருத்தும் ஒன்றோடொன்று உறவு கொள்வதையும், முரண்படுவதையும் நாம் காணத் தவறக்கூடாது. உண்மையில் அறம் தான் தெய்வமாக இருக்க வேண்டும். புத்த சமயத்தில் அறத்திற்கு இந்தத் தகுதி தரப்பட்டிருக்கிறது. பிரபஞ்சம் கறாரான ஒழுங்குமுறையோடு இயங்குவதாகக் கருதி இந்த ஒழுங்கு முறையே இறை என்று வேதங்களிலும் சுட்டப்பட்டிருப்பதை அறிஞர் எடுத்துரைக்கின்றனர்.

மதுரை எரிந்து கொண்டிருக்கிறது. ஆவேசத்தோடு கண்ணகி தெருக்களின் வழியே சென்று கொண்டிருக்கிறாள். மதுரை நகரின் காவல் தெய்வமான மதுராபதி கண்ணகிக்கு முன்வர அஞ்சி, தயங்கித் தயங்கி பின்னே சென்று கண்ணகியைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறது. முகம் திருப்பாமல் கண்ணகி நீ யாரென்று கேட்க, மதுராபதி தெய்வம் தன்னைப்



பற்றிச் சொல்லி, பாண்டிய மரபின் வரலாறும் சொல்லி, மதுரை நகரத்தை எரிப்பதிலிருந்து விடுதலை வேண்டுகிறது. கருணையோடு கண்ணகியும் உடன்படுவதாக கதை. சிலப்பதிகாரத்தில் சில இடங்களில் கண்ணகியைத் தெய்வமென்றே பலரும் பாராட்டியுள்ளதை அறிகிறோம்.

மணிமேகலையில் ஆபுத்திரனைப் பற்றிச் சொல்லப்படும் கதை ஒரு அற்புதமான கதை. இரவில் வந்த வணிகர்களின் பசி தீர்க்க சிந்தாதேவியை ஆபுத்திரன் வேண்டுகிறான். அள்ள அள்ளக் குறையாத உணவைச் சுரக்கிற அமுதசுரபி எனும் பாத்திரத்தை ஆபுத்திரனுக்கு அவள் அருளினாள். இந்த அமுதசுரபி கொண்டு மக்களின் வறுமை தீர்த்தான் ஆபுத்திரன். தன் பதவி பறிபோய் விடுமென்று அறிந்த இந்திரன் அவன் முன் தோன்றி இந்திர உலகிற்கு வருமாறு அழைத்தான். அங்கு வறியவர் உண்டா? இருந்தால் வருகிறேன் என்று தான் ஆபுத்திரன் பதில் கூறினான். தமிழ்மக்கள் மத்தியில் கடவுள் மறுப்பு என்ற கருத்தும் தொடக்க காலம் முதலே இருந்தது என்பது உண்மைதான். அதைப்போலவே கடவுள் ஏற்பு என்ற கருத்தும் இருந்து வந்ததை நாம் காணத் தவற முடியாது. உலகின் பிற சமுதாயங்களிலிருந்து தமிழ்ச் சமுதாயம் முற்றாக வேறுபட்டதாகவும் இருக்க முடியாது.

எல்லா சமூகங்களிலும் முதற்காலத்தில் உயிரியக்கம் என்ற கருத்து இருந்திருக்கிறது. இதன் தொடர்ச்சியாக இறைக் கருத்து தோன்றி வளர்ந்துள்ளது. இயற்கை முதலியவற்றின் இயக்கத்தை விளங்கிக் கொள்ள மனிதன் எடுத்துக் கொண்ட ஒரு பெரும் முயற்சியின் போது தான் இறை கருத்தும் தோன்றி இருக்க முடியும். உலக இயக்கத்தைப் புரிந்து கொள்ளாமல் மனிதன் வாழ முடியாது. இது குறித்த அறிவுத் தேடலின் ஒரு விளைவுதான் இறைமைக் கருத்து. இந்தக் கருத்தின் மனிதச் சார்பு குறித்துத்தான் நாம் இங்கு பேசுகிறோம். இதன் தமிழ்ச்சார்பு குறித்து நாம் கூடுதலாகப் பார்க்கிறோம்.

தமிழகத்தில் வளர்ச்சி பெற்ற சைவ சமயத்தினுள்ளும், வைணவ சமயத்தினுள்ளும் மனிதச் சார்பான கருத்தை நாம் காண்கிறோம். திருமந்திரம் அன்பும் சிவமும் ஒன்றுதான் என்கிறது. நடமாடும் கோயிலாகிய உயிர்களுக்கு ஒரு பொருளை ஈவது தான் இறைவனுக்குச் செய்யும் பணி என்றும் திருமூலர் கூறுகிறார். மனிதனிடமிருந்து தோன்றிய இறைமை எனும் கருத்து மனித எல்லையிலிருந்து விலகி, அப்புறம் மனிதனை மட்டுமல்லாமல் பிரபஞ்சத்தையும் தனக்குள் அடக்குவதாகிய

போக்கைப் பெறுவதை எல்லாச் சமயத்தின் உள்ளும் நாம் காண்கிறோம். இதற்குத் தமிழனும் விலக்காக இருக்க முடியாது. இப்படி மனித எல்லையைக் கடந்து செல்லும் இறைமைக் கருத்து திரும்பத்திரும்ப மனித எல்லைக்குள் மனிதனை நெருங்கி வருவதையும் நாம் பார்க்கத்தான் செய்கிறோம். 'மனிதப் பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே' என்ற தேவாரக் கருத்தினுள் இந்தப் போக்கை நாம் காண முடியும். மனிதனின் இருப்புக்கும், இயக்கத்துக்கும் வானமும், மண்ணும் காற்றும் முதலிய பூதங்கள் தேவைப்படுகின்றன. இவற்றின் இயங்குதலின் மூலமே மனிதன் தனக்கான இயக்கத்தைப் பெறுகிறான். வானாகி, மண்ணாகி, வளியாகி என்றெல்லாம் மாணிக்கவாசகர் கூறுவதை இப்படிப் புரிந்து கொள்ள முடியும். ஆழ்வார்கள் மற்றும் நாயன்மார்களின் உள்ளும் அவர்களின் மனித நலச் சார்பை நாம் இப்படித்தான் மதிப்பிட முடியும்.

இறுதியாக, தமிழ்ச் சித்தர்கள் பற்றி நாம் குறிப்பிட வேண்டும். தமிழ்ச் சிந்தனையின் உச்சமென இவர்களை நாம் காணலாம். 'யாதும் ஊரே; யாவரும் கேளிர்' என்றும், 'செல்வத்துப்பயனே ஈதல்' என்றும் தமிழ்ச் சான்றோர் கூறினர். ஒப்புரவு குறித்து, வள்ளுவர் பேசினார். அகத்திணையின் உள்ளடக்கமாகிய அன்புதான் பிறகு தமிழ்மக்களின் இறைமைக் கருத்தினுள்ளும் வளர்ச்சி பெற்றது. ஒப்புரவைப் போற்றும் தமிழ்ச் சிந்தனை சாதிகளையோ, மதங்களையோ, சடங்குகளையோ முன்னிறுத்த முடியாது. சாதி, சமயம், சடங்கு முதலியவற்றை முற்றாக ஒதுக்கிய சித்தர் நெறியை, தமிழ்ச்சிந்தனையின் மையமெனக் குறிப்பிடுவது பொருந்தும். கடவுள் என்ற கருத்தின் மையமும் சமதர்மம் என்பதைத் தவிர வேறு என்னவாக இருக்க முடியும்? மனிதன் பிறப்பு அறவேண்டும். வீட்டுலகை அடைய வேண்டும். இறைமையோடு ஒன்ற வேண்டும் என்றெல்லாம் கூறும்பொழுது மனிதன் பெற விரும்பும் வீடு / விடுதலை என்பதன் உள்ளடக்கம் சமதர்மம் என்பதன்றி வேறு என்ன? இந்தச் சித்தர்களின் தொடர்ச்சியில்தான் பெரியார், புதுமைப்பித்தன், ஜெயகாந்தன் முதலியவர்கள்.



# 6. தமிழன் – வரலாறும் வாழ்வும்

உலகில் தமிழன் பெருமை கொள்வதற்கு எத்தனையோ காரணங்கள் உள்ளன. உலகின் மிகத் தொன்மையான நாகரிகங்களில் ஒன்று தமிழ் நாகரிகம். உலகின் மூத்த இனங்களில் ஒன்று தமிழ் இனம். இலக்கண வளமும், இலக்கிய வளமும் உடைய தமிழ் மொழிக்காகத் தமிழன் எவ்வளவோ பெருமைப்பட்டுக் கொள்ளலாம். இந்தியா முழுவதிலும் ஒரு காலத்தில் தமிழ் நாகரிகம் பரவியிருந்தது. கடல் கடந்து சென்றது.

சாங்கியம் முதலிய மெய்யியல்களைத் தோற்றுவித்தவர் தமிழர். தமிழனின் சிற்பக்கலைக்கு ஈடுஇணை சொல்வதற்கில்லை. தென்னக / கர்நாடக இசைக்கும் பரதநாட்டியத்திற்கும் மூலவர் தமிழர்கள். 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்', 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' இத்தகைய கூற்றுகளுக்குள் அடங்கியுள்ள சமதர்ம உணர்வு தமிழ் உணர்வு. சங்க இலக்கியமும் திருக்குறள், சிலப்பதிகாரம் முதலியனவும் தேவாரம், திவ்யபிரபந்தம் முதலியனவும் சித்தர் பாடல்களும் தமிழனை உலக நாகரிக வரலாற்றில் என்றும் நிலை நிறுத்தும். வள்ளலாரும், பெரியாரும், பாரதியும், பாரதிதாசனும், தமிழ்மக்களின் சொத்துக்கள்.

தமிழ் நாகரிகத்தை விளைவித்தது வேளாண்மை. திராவிட இயக்கம் தமிழனுக்கு அடையாளமும் ஆற்றலும் தந்த இயக்கம். தர்க்கம், கட்டிடம், சிலம்பம் முதலிய கலைகளிலும் தமிழனின் சாதனைகள் அற்புதமானவை. இவ்வாறு எத்தனையோ பெருமைகளுக்கு தமிழன் உரிமை கொண்டாடுவதில் தவறில்லை. ஆனால் இவ்வகைப் பெருமைகள் தற்பெருமைகளாக மாறுகிறபொழுது, ஆணவமாக மாறுகிற பொழுது, தமிழன் உலகத் தொடர்பிலிருந்தும் வரலாற்று இயக்கத்திலிருந்தும் தன்னை துண்டித்துக் கொள்ளும்போது, தன் ஆற்றல் அழிந்து சிறுமைப்பட்டுப் போகிறான். இதைத்தான் இன்றைய தமிழனின் வரலாறு நமக்கு உணர்த்துகிறது.

இன்னும் எத்தனையோ 'பெருமைகள்' தமிழனுக்கு உரியவை என சொல்லப்படுகின்றன. இந்தியாவிலேயே தமிழகத்தில்தான் 'அமைதி' நிலவுகிறது. வட இந்தியரும் அயல் நாட்டினரும் தம் தொழில் வளர்ச்சிக்கான வாய்ப்புத் தேடி தமிழகத்திற்குத் தான் வருகின்றனர். தமிழகத்தில்தான் போக்குவரத்து வாய்ப்புகள் அதிகம். தமிழகம் தொழில்

வளர்ச்சியில் முன்னேறி வருகிறது. அரசியல் துறையில் இந்தியாவிற்கே 'வழிகாட்டுகிறது' தமிழகம்.

இவ்வகைப் பெருமைகளோடு, மேலும் சிலவற்றை சேர்த்துக் கொள்ளலாம். கணனித் துறையில் தமிழ் இளைஞர்களின் அறிவாற்றலைக் கண்டு உலகம் வியக்கிறது. எதிர்காலத்தில் தமிழ் இளைஞர்களின் அறிவாற்றல் இல்லாமல் அமெரிக்கா வளர்ச்சி பெற முடியாது. இன்னும் சில பெருமைகள். திரைப்படத் துறையில் மகாராட்டிரத்திற்கு அடுத்தபடியாகத் தமிழகமே முன் நிற்கிறது. இதைப் போலவே வணிகக் கலாச்சார வளர்ச்சியிலும் இந்தியாவில் முன்னேறிய மாநிலங்களில் தமிழகமும் ஒன்று. கலைத்துறையில், பத்திரிகைத் துறையில் தமிழகத்தின் சாதனைகள் வியக்கத்தக்கவை. அலங்காரம், ஆடை அணிகலன்கள், அழகுச் சாதனங்கள் முதலியவற்றைப் பயன்படுத்துவதில் தமிழகம் முன் நிற்கிறது.

இப்படியும் எத்தனையோ பெருமைகள். இந்தியாவில் விற்பனையாகும் பரிசுச் சீட்டுகளில் 40% (சதம்) தமிழகத்தில் தான் விற்பனையாகிறது. மதுபானப் பயன்பாட்டிலும் தமிழகத்தின் பங்கு இதே 40 சதம். மதுபான விற்பனைக்கான ஏலத்தில் கிடைத்த தொகை ரூபாய் 500 கோடி. இந்தியாவில் எய்ட்ஸ் படையெடுப்பு மகாராட்டிரத்திற்கு அடுத்தபடியாக தமிழகத்தில்தான் அதிகம். இந்தியாவில் வறுமைக் கோட்டிற்குக் கீழ் 40 சதம் மக்கள் வாழ்கின்றனர். தமிழகத்திலும் இதே நிலை. கல்வியறிவைப் பெற்றவர் தொகை 57 சதம். வேலையில்லாதவர்கள் சுமார் 1 கோடி பேர். பவானி, நொய்யல், அமராவதி முதலிய ஆறுகள் அழிந்து வருகின்றன. கைத்தறி நெசவாளர்களுக்கு இனி வாழ்வதற்கு வழி இல்லை என்ற நிலை நேர்ந்து வருகிறது. மார்வாரிகளும், குஜராத்திகளும் தமிழ் மண்ணை ஆக்கிரமித்து வருகிறார்கள்.

தமிழனுக்கு இப்படியும் இன்னும் எத்தனையோ பெருமைகளை அடுக்கிக் கொண்டே போகலாம். ஆங்கிலத்தின் ஆதிக்கம் இங்கு தான் அதிகம். ஆங்கிலப் பள்ளிகளை ஏராளமாகத் தொடங்கி மக்களைச் சுரண்டுவதன் மூலம் முதலாளிகள் இன்று பல்லாயிரக்கணக்கில் பெருகி வருகின்றனர். இந்தக் கல்லூரிகள் பேராசிரியர்களின் தன்மானம் முதலிய பண்புகளை அழித்து அவர்களை வெற்றி கண்டு வருகின்றன.

தமிழ்ப் பள்ளிகள் இருந்த இடத்தில் ஆங்கில / மெட்ரிக்குலேசன் பள்ளிகள் ஆயிரமாயிரமாய் இத்தகைய பள்ளிகளை நிர்வாகம் செய்யும் முதலாளிய பெருச்சாளிகளை தமிழக அரசு கண்டு கொள்வதில்லை.



தமிழக அரசு கிடைப்பதைச் சுருட்டிக் கொள்வோம் என்ற பண்பாட்டை எல்லோரும் கடைபிடித்து வருகின்றனர். அரசுக்கும் ரிசர்வ் வங்கிக்கும் தெரியாமல் சுயநிதி நிறுவனங்கள் மக்களை கொள்ளை அடிக்கமுடியாது. தமிழகத்தில் அரசியல்வாதிகள் அடித்த கொள்ளைக்கு அளவு இல்லை. இவர்களின் சொத்துக்களை 1000 கோடிகள் என்ற அளவில்தான் இனி அளக்கமுடியும். கொள்ளையடிப்பதைத் தொழிற்சங்கங்கள் கண்டு கொள்வதில்லை.

ஸ்டெர்லைட் தொழிற்சாலை, தாபர்டியூபான்ட் முதலிய அன்னிய நிறுவனங்கள் அரசின் ஆதரவோடு பத்திரமாகச் செயல்படலாம். இந்தியாவின் பெட்ராய்டு என்று பெருமைப்பட்டுக் கொள்ளும் கார் தொழிற்சாலைகள் இங்கு இறக்குமதியாகின்றன. இணையம் இனி எல்லா மக்களுக்கும் வந்து சேரும். மருத்துவம், பொறியியல் முதலியவற்றை ஆங்கிலத்தில் கற்றுக் கொண்டால்தான் உலக அரங்கில் வலம் வர முடியும். மெக்காலே திரும்ப தமிழகத்தில் பிறப்பெடுத்து வருகிறான். ஆங்கிலத்திற்கு தமிழகம் விளைநிலமாக இருப்பதில் வியப்பில்லை. இலட்சக்கணக்கான பெற்றோர்களுக்கு ஆங்கிலப்பித்தை ஏற்றி விட்டதில் அரசியல்வாதிகளைப் போலவே ஆங்கிலப் ஆசிரியர்களும், பத்திரிக்கையாளர்களும் காரணமாக இருக்கின்றன. ஊதியம், வேலையில் நிரந்தரம், வசதிகள் என்ற முறையில் தமிழாசிரியர்களும் தம்மை, தம் வாழ்வை உறுதிப்படுத்திக் கொள்கின்றனர். தெருக்கள்தோறும் பெருகிய கல்வி நிறுவனங்கள் இனி மாணவர்களின் அறிவை ஒரே திசையில் செலுத்துவதில் வெற்றி பெரும் வசதி மிக்க வாழ்க்கை என்பதே இவர்கள் இலட்சியம்.

இப்படி எத்தனையோ சாதனைகள் தொடர்ந்து நிலவுகின்ற தமிழ்ச் சூழலின் மறுபக்கத்தை இப்பொழுது பார்ப்போம். தமிழ் மக்கள் அந்நியரால் மட்டுமல்ல உள்நாட்டவராலும் கடுமையான சுரண்டலுக்கு உள்ளாகின்றனர். உழவர்கள் கடனாளியாகித் தம் சொந்த நிலங்களை இழந்து நகரங்களில் கூலி வேலைக்கு அலைகின்றனர். நவீன தொழில்நுட்பங்களின் வேகம் அதிகரிக்கிற அளவில் தொழிற்சாலைகளிலிருந்து தொழிலாளர்கள் வெளியில் தள்ளப்படுகின்றனர். வேலை வாய்ப்புக்கள் தொடர்ந்து குறைகின்றன. நுகர்வு வெறி வாய்ப்புகள் சமூகத்தின் உச்சத்தில் உள்ளவர்களுக்கும், நடுத்தர மக்களுக்கும் கூடுகிற நிலையில் இவர்களின்

கொள்ளைகளுக்கும், ஊழல்களுக்கும் மக்கள் உட்படுத்தப்படுகின்றனர். அரசு ஊழியருக்கு ஆபத்து என்றால் இலட்சக்கணக்கில் இழப்பீட்டுத் தொகை வழங்கப்படுகிறது. காவல் நிலையங்களில் பெண்கள் கற்பழிக்கப்பட்டாலும் இழப்பீட்டு தொகையைக் கோரி பெறமுடியும்.

பசுமைப்புரட்சி, சாய்ப்பட்டறை, தோல் பதனிடும் தொழிற்சாலைகள், நெய்வேலி நிலக்கரித் திட்டம், தாபர்டியூபாண்ட் இன்னும் புதிய வகைத் தொழிற்சாலைகள் முதலியவற்றின் விளைவாக நீர்நிலைகள், நாசமாகி, நிலங்களில் நஞ்சேறி, வேளாண்மை அழிந்து, எத்தனையோ புதுவகை நோய்களுக்கு உள்ளாகி கோடிக்கணக்கான மக்கள் தம் வாழ்க்கையை இழந்து வருகிறார்கள். மனநோய்களுக்கு ஆட்படுகின்றனர். தற்கொலைகள் தொடர்ந்து அதிகரிக்கின்றன. வேசித்தனம் தொடர்ந்து பெருகி வருகிறது. மக்கள் தம் உடல் உறுப்புகளைக் கூட விற்பதில் முன்னேறி வருகின்றனர். அலோபதி மருத்துவர்கள் மக்களைக் கொள்ளையடிப்பதில் எதையும் குறைத்துக் கொள்வதில்லை. வழக்குரைஞர்களுக்கும், தணிக்கையாளர்களுக்கும் வாய்ப்புகள் கூடி வருகின்றன. காவல்துறை தொடர்ந்து எண்ணிக்கையில் தன்னைப் பெருக்கிக் கொள்கிறது. அரசு தொடர்ந்து தன்னைப் பலப்படுத்திக் கொள்கின்றது. இயக்கங்கள் ஒடுக்கப்படுகின்றன.

இப்பொழுது எல்லாவற்றையும் இன்னும் ஒருமுறை திரும்பப் பார்த்துக் கொள்வோம். தமிழன் தன் வரலாற்றுப் பெருமைகளை இழந்து வருகிறான். தமிழினத் தலைவர்களே தமிழனை தன்மானம் அற்றவனாய் அறஉணர்வு அற்றவனாய் மாற்றி வருகிறார்கள். தமிழ் மக்களின் தன்மானத்தை அழித்து அவர்களை வறியவராக்கி, கோழைகளாக்கி அவர்களிடமிருந்து கொள்ளையடித்த செல்வத்தில் தலைவர்கள் திளைத்து வருகிறார்கள். அரசு அலுவலர்கள் மற்றும் முதலாளிகளோடு இவர்கள் கொண்டிருக்கும் இறுக்கமான உறவு தமிழ் மக்களைத் தமக்கு அடிமைகளாக்குவதோடு அவர்களை அகதிகளாக்கி வருகிறது. இவர்களிடம் எந்த வரலாற்றுப் பெருமை அல்லது ஆற்றல் தங்கியிருக்க முடியும்?

இந்தத் தமிழ் மகன் எந்தத் தமிழை நேசிப்பான்? இவன் எப்படி திருக்குறள் கற்பான்? சங்க இலக்கியத்தின் சாரம் இவனுக்கு எப்படி புரியும்? இவனுக்குள் எப்படி சிலப்பதிகாரம் தங்கும்? பொதுமையுணர்வு இவனுக்குள் எங்கிருந்து பூக்கும்? மண்ணோடும், மலர்களோடும், வானத்தோடும் இவன் எப்படி உறவு கொள்வான்? காமத்திலும்,



மதுபானத்திலும், அர்த்தமற்ற ஆவேசமான மேடைப்பேச்சுகளிலும், வெற்று ஆரவாரங்களிலும் மலினப்படுத்தப்பட்ட நிலையில் இவனுக்குள் எங்கிருந்து அறம் தழைக்கும்? வீரம் பெருகும்? இவன் தலைவர்களுக்கு அடிமை. துதிபாடித்தான் இவன் தன் வாழ்வைத் தக்க வைத்துக் கொள்ள முடியும். பெரியாரை எங்கிருந்து இவன் நேசிப்பான்? பணத்திற்கு இவன் அடிமை. அதிகாரத்திற்கு இவன் அடிமை. ஊழலுக்கு இவன் தன் வாழ்வை ஒப்படைத்து விட்டான். இவனிடம் வள்ளுவர் தங்குவாரா? இவனிடம் பெரியாருக்கு இடம் உண்டா? இவனுக்கேது பகுத்தறிவு? இப்படி இவனை ஆற்றல் இழந்தவனாய்ச் செய்தவர் யார்? வெற்றுப் பெருமையில் இவனை மூழ்கடித்து, அதையே கிளிப்பிள்ளை போல ஓதுவதில் இவன் எத்தனை நாளுக்கு நிம்மதியாய் இருக்க முடியும்? தமிழ் மந்திரம் இவனைக் காப்பாற்றுமா? தமிழ்ப் பூசாரிகள் இவனைக் காப்பாற்ற முடியுமா?

தமிழனுக்கு நாடு வேண்டும், நிலம் வேண்டும், ஆறுகள் வேண்டும், இயற்கை வேண்டும், வாழ்வும் வரலாறும் தேவை. தமிழன் தனக்கான பொருளியலைப் பெற வேண்டும். தன்னை நிர்ணயித்துக் கொள்கிற அரசியல் வேண்டும். வரலாற்றின் வழியே இவனுக்குள் வந்து சேர்ந்திருக்கிற பெருமைகளை தனக்கு ஆற்றலாக இவன் மாற்றிக் கொள்ள வேண்டும். உலக வரலாற்றுப் போக்கில் வைத்துத் தன்னை இவன் காண வேண்டும். வரலாற்றில் இவனை யார் யாரோ வென்றார்கள். அழித்தார்கள். சிதைத்தார்கள், கேவலப்படுத்தினார்கள். இதே காரியத்தை இன்றும் செய்கிற சக்திகளை இவன் இனங்கண்டு கொள்ள வேண்டும்.

இன்று இவன் முகத்தை, மொழியை, பண்பாட்டை அழிக்கிற பார்ப்பனர் யார்? அரக்கர் யார்? என்பதை இவன் கண்டு கொள்ள வேண்டும். இவனுக்கு இன்று ஆயிரக்கணக்கில் பெரியார்கள் தேவை. பாரதியும் பாரதிதாசனும் தேவை. அநீதியைத் தீயிட்டு அழிக்கின்ற கண்ணகிகள் தேவை. வறுமை தீர்க்கவல்ல மணிமேகலைகள் தேவை. மார்க்ஸை இவன் ஒதுக்க முடியுமா? ஒதுக்க முடியாது.

உலக வரலாற்றுக்கு இன்றைக்கும் நாளைக்கும் தமிழன் தேவை. தமிழ் மொழி தேவை. தமிழ்ப் பண்பாடு தேவை. தமிழ்ப் பண்பாட்டின் சாரமாகிய சமதர்மம் தேவை. மூடிக் கிடக்கிற தமிழர் தன் முகத்தைப் புதிய வெளிச்சத்தில் திறந்து கொள்ள வேண்டும். விழித்து அவன் நோக்கும் பார்வையில் தமிழனின் எதிரிகள் தூசாக வேண்டும். இதைச் செய்யவில்லை என்றால் வரலாற்றில் தமிழன் பெற்ற சாதனைகளுக்கு அர்த்தம் இல்லை.

# 7. சாதிகளைக் கைவிடுவோம் - தமிழராய் இணைந்திடுவோம்.

சாதி என்பது தமிழ்நாட்டில் பெரும் சிக்கலாக இருந்து வருகிறது. அண்மைக் காலத்தில் சாதிச் சங்கங்கள் பெருகிவிட்டன. சாதி மோதல்கள் தொடர்ந்து குரூரமாய் வெடித்து வருகின்றன. தமிழ்நாட்டின் வரலாற்றில் அண்மைக்காலத்தில் தீர்க்க முடியாத கறையாகிவிட்டது சாதி மோதல்.

அரசியலில் சாதிய அரசியல் என்பது முன்வரிசைக்கு வந்திருக்கிறது. சிலருக்கு இது ஆதாயமாகவும் மாறிவிட்டது. உள்நாட்டுக் கலவரம் என்று சொல்லும் அளவிற்குச் சில மாவட்டங்களை இந்த அரசியல் அலைக்கழித்து வருகிறது. தவிர்க்க முடியாத சிக்கலாகவும் இது தோன்றுகிறது. சமூக உணர்வுள்ளவர்களுக்கு இது பெரும் வேதனை தருகிறது.

சாதிய அமைப்பை பார்ப்பனர்தான் கொண்டு வந்தனர் என்று திரும்பத் திரும்பப் பேசி, பார்ப்பனியத்தை வேரோடு களைந்தால் மட்டுமே சாதிகள் ஒழியும் என்று ஒரு சார்பினர் தொடர்ந்து பேசுகின்றனர். பார்ப்பனியம் எல்லா சாதிகளுக்குள்ளும் ஆழமாகத் தங்கிவிட்டது என்று இவர்கள் சொல்லும்பொழுது சிக்கலின் பரிமாணங்கள் கூடியிருப்பதை உணர்கிறோம். உணவு முதலிய பழக்கங்களில், திருமணம் தொடங்கி எத்தனையோ சடங்குகளில் சாதி தங்கியிருக்கிறது. உண்மை என்னவென்றால் சாதியோடு மதம் சம்பந்தப்பட்டிருக்கிறது. முதலாளியம் சாதியைப் பயன்படுத்திக் கொள்கிறது.

தேர்தல் காலத்தில் சாதி உசுப்பி விடப்படுகிறது. இட ஒதுக்கீட்டின் வடிவத்தில் சாதி இடம் பெறுகிறது. அரசுப்பணிகளில், உள்ளாட்சித் துறையில் சாதிக்கு இடம் தரப்படுகிறது. இவ்வாறெல்லாம் நம் தமிழ்ச் சமுதாயத்தில் சாதி காப்பாற்றப்படுகிறது. இவ்வாறு இறுக்கமாகத் தங்கிவிட்ட சாதியத்தை எப்படி ஒழிப்பது என்பது குறித்தும் எல்லோரும் பேசுகிறார்கள்.

காதல் திருமணம், கலப்புத்திருமணம் சாதியத்தை ஒழிப்பது குறித்து நமக்குச் சந்தேகம் ஏற்பட்டுள்ளது. அடுத்த தலைமுறைக்குள் சாதி வந்து விடுகிறது. இட ஒதுக்கீட்டின் விளைவாக சமூக நீதி சாத்தியப்படும் என்ற



போதிலும் இதன் வழியாகவும் சாதி நிலைத்து விடலாம். இட ஒதுக்கீட்டிற்கான காரணிகளில் ஒன்றாகப் பொருளாதார வசதி மிகுதல் ஏற்றுக் கொள்ளப்படுவதும் இல்லை. சாதி அமைப்பின் பொருளாதார அடிப்படை மறுக்கப்படவும் செய்கிறது.

சோசலிசம் இங்கு செயல்பட்டிருக்குமானால், தொழில் வளர்ச்சி இங்கு நேர்ந்து வேலை வாய்ப்புகள் பெருகியிருக்குமானால், சாதி என்ற பிசாசின் கோரத் தாண்டவம் எழுந்திருக்க முடியாது. தரமான கல்வி அனைவருக்கும் என்ற முறையில் தரப்பட்டிருக்குமானாலும் சாதியின் ஆதிக்கம் குறைந்திருக்கும் என்று அறுதியிட்டு உறுதியாகச் சொல்லலாம். இவற்றையெல்லாம் இந்திய, தமிழக அரசியல்வாதிகள் செய்யாததன் விளைவை இன்று நாம் வேதனையோடும், கண்ணீரோடும் அனுபவிக்கிறோம். சந்தைப் பொருளாதாரம் தொடர்ந்து நம் சமூகத்தை தன் ஆதிக்கத்திற்கு உட்படுத்தி வரும் நிலையில் சாதிய மோதல்கள் குறைவது பற்றி இன்று நாம் சிந்திக்க முடியாது.

சாதி எப்பொழுது தோன்றியது? யார் தோற்றுவித்தார்கள்? என்றெல்லாம் தொடர்ந்து ஆய்வுகள் செய்யப்படுகின்றன. சாதியைத் தோற்றுவித்தவர்கள் திராவிடர்கள் என்பதற்கும் சில ஆதாரங்கள் சொல்லப்படுகின்றன. ஆனால் ஒன்று உறுதி : பார்ப்பனரும், திராவிடரும் இணைந்து செயல்படாமல் சாதியம் என்ற அமைப்பு இந்தியாவில் உறுதிப்படவில்லை. சாதியம் என்பது கருத்தியலாக அன்றும் இல்லை. இன்றும் இல்லை. வேலைப் பிரிவினையோடு மட்டுமல்லாமல் சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வோடும் சாதி உறவு கொண்டிருக்கிறது. தனி உடமையோடும் அரசாதிக்கத்தோடும் சாதி நெருக்கமாக இணைந்து உள்ளது. சாதியை மதம் புனிப்படுத்தியுள்ளது. இவற்றையெல்லாம் இந்திய வரலாற்றில் நாம் காண்கிறோம். இப்படி இறுக்கமாக எல்லாவற்றோடும் இணைந்துள்ள அல்லது எல்லாமாகவும் தோற்றம் தருகிற சாதியை எந்த இடத்தில் வெட்டினால் இதன் இணைப்பு கண்ணிகள் தகர்க்கப்படும்?

மார்க்சியரும் சாதி பற்றி பேசுகின்றனர். இந்தியாவின் சமூக அமைப்பை ஆசிய உற்பத்தி முறை என்று மார்க்ஸ் குறிப்பிட்டதனுள் சாதியின் இடத்தை நாம் புரிந்து கொள்ள முடியும். ஆசிய உற்பத்தி முறை குறித்த ஆய்வில் இந்திய மார்க்சியர் ஏன் ஈடுபடவில்லை என்று இங்கு ஆய்வதில் பயனில்லை. இந்தியாவில், கிராமங்களைப் பொருத்தவரை சாதிய அமைப்பு, உற்பத்தி, விநியோகம், நிர்வாகம் என்ற மூன்று கூறுகளில்

இணைந்ததொரு அமைப்பாக இருந்தது. நிலத்தில் தனியுடைமை இல்லை. கிராமசபைக்கு நிலம் சொந்தம். நிலம் கிராமத்திலுள்ள குடும்பங்களுக்கிடையில் 7 அல்லது 14 ஆண்டுகளுக்கொருமுறை மாற்றிக் கொள்ளப்பட்டது. வேளாண்மைக்குத் தேவையான சேவை என்ற முறையில் கைவினைஞர்களும், பஞ்சமர்களும் இருந்தனர். இவர்களுக்கு நில உடமையில் உரிமை இல்லை. ஆண்டுக்கு இவ்வளவு என்று அவர்கள் பெற்றுக் கொள்வார்கள். கிராமச் சபைதான் எல்லாவற்றையும் நிர்வாகம் செய்யும். சாதிக் கலப்பென்பது உடமை முறையிலும் நிர்வாகத்திலும் சிக்கல்களை ஏற்படுத்தும்.

சாதிக்கலப்பு புனிதமானது அன்று. இதை நிர்வாகம் செய்ய தர்ம நூல்கள் மற்றும் பார்ப்பனர்கள் இருந்தனர். தள்ளி வைத்தலும், தண்டனைகளும் விதிக்கப்பட்டன. நில நிர்வாகம் என்று தொடங்கி அரசோடு எத்தகைய உறவு கொள்வது என்பது வரை கிராம சபைகள் தீர்மானித்தன.

இனக்குழு சமுதாயத்தின் தொடர்ச்சியில் வைத்து தான் இந்த அமைப்பை நாம் காண முடியும். இனக்குழு சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுகள் இல்லை. வேலைப் பிரிவினைகள் இருந்தபொழுதிலும் ஏற்றத்தாழ்வுக்கு அந்தச் சமுதாயத்தில் இடமில்லை. அங்கும் இனக்குழுத் தலைவர் / குருமார்கள் இருந்தனர். போர் மறவர்கள் இருந்தனர். கைவினைஞர்கள் இருந்தனர். வேலைப்பிரிவினை என்ற முறையில் இப்படி பல பிரிவுகள் இல்லாமல் சமூக இயக்கம் சாத்தியமில்லை. ஒருவகையில் இவை குடியரசுகள். சமதளத்தில் ஒரு கூட்டு அமைப்பு போல இருந்த இந்தச் சமூக அமைப்பு நாளடைவில் மெல்ல மெல்ல இடைக் காலத்தில் ஒரு கோபுர அமைப்பாக மாறியதை நாம் வரலாற்றில் காண்கிறோம்.

இனக்குழு சமூக அமைப்பு என்ற கருவை இன்றும் கூட தமிழகத்தில் பெரும் சாதிகள் என்ற தொகுப்புகள் பலவற்றினுள்ளும் நாம் காண முடியும். சான்றாக, கொங்கு நாட்டில் வேளாளர் (கவுண்டர்) சாதிக்குள் மையத்தில் நிலவுடைமையாளர்கள் இவர்களோடு கொங்குச் செட்டியார், கொங்கு நாவிதர் முதலிய 12/18 சாதியினர். இவர்கள் அனைவரும் ஒரு தொகுப்பினுள் அடங்குவர். இவர்களைப் போலவே தேவேந்திரர் சாதி அமைப்பினுள்ளும் இதே அமைப்பு.

குறிஞ்சி வேளாளர் என்று சொல்லப்படும் குறவர் சாதிக்குள்ளும்



இப்படி ஓர் அமைப்பு. இவ்வகை அமைப்பை திராவிடர்களின் சமூக அமைப்பு என்று சொல்வதுதான் பொருந்தும். சமூகத்தினுள் தனியுடைமையும், அரசாதிக்கமும் வலுப்பெற்ற கால நிலைமைகளில் பார்ப்பனர்கள் உள்ளே நுழைந்து தங்கினர். தனியுடைமை மற்றும் அரசாதிக்கத்திற்கு இவர்களைப் போலவே மதங்கள் ஒத்துழைத்தன. முன் பிறப்பில் புண்ணியங்கள் செய்தவர்கள்தான் இப்பிறப்பில் அரசர்கள் என்றெல்லாம் பவுத்தம் முதலான சமயங்கள் கூறின. இனக்குழுச் சமூகத்தில் இருந்த தொகுப்பு என்ற வடிவ அமைப்பு மாறி பேரரசுகள் உருவான காலநிலைமைகளில் எல்லா சாதி அமைப்புகளும் படிமுறை வரிசையில் இணைக்கப்பட்டன. சமதள அமைப்பு, கோபுர அமைப்பாக மாறியது.

ஆங்கிலேயர் வருகைக்குப் பின் இந்த கட்டமைப்புக் குலைந்ததாகச் சொல்வதற்கு இல்லை. ஆனாலும், சாதிய முறை கேள்விக்கு உள்ளானதையும் நாம் பார்க்கிறோம். சமத்துவம், சகோதரத்துவம் என்றெல்லாம் முழக்கங்கள் எழுந்த சூழலில், சுமார் ஓர் ஆயிரம் ஆண்டுகளாக இந்தியாவில் ஏற்றத்தாழ்வோடு நிலவி வந்தச் சமூகத்தை இன்று நாம் மறுக்கிறோம். முன்பு இருந்ததைக் காட்டிலும் இன்று ஏற்றத்தாழ்வுகள் பலமடங்கு பெருகியிருப்பதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

கிராம சமூகத்தில் நிலவுடைமையாளர், கைவினைஞர், பஞ்சமர் என்ற மூன்று வகுப்பாளர்களுக்கிடையில் கிராமத்தின் உற்பத்தி 8:5:3 என்ற விகிதத்தில் பிரித்துக் கொள்ளப்பட்டது என்று அறிஞர் தரம்பால் ஆராய்ந்து கூறியுள்ளார். சமூக உற்பத்தியில் இந்த மூன்று வகுப்பாருக்கிடையில் இப்படி ஒரு விகிதம் இன்று இல்லை. உயர் வகுப்பினர் சமூக உற்பத்தியில் 80 சதத்திற்கு மேல் இன்று எடுத்துக் கொள்கின்றனர். மிச்சமிருப்பதைத்தான் பிறர் எடுத்துக் கொள்ளவேண்டும். ஆகவேதான் சாதி மோதல்கள் இன்று பெருகி வருகின்றன. அரசு ஆதரவோடு உயர்வகுப்பினர் எவ்வளவும் எடுத்துக் கொள்ளலாம் என்ற நிலை' இன்று நமக்கு உடன்பாடு இல்லை.

நிலவுடைமையிலிருந்து ஆதிக்கத்திலிருந்து சாதியை விலக்கிவிட வேண்டுமென்று நாம் கோருகிறோம். சமத்துவத்தை வற்புறுத்துகிறோம். உழைப்பவர்களுக்கே நிலம் சொந்தம் என்கிறோம். எல்லோர்க்கும் கல்வி தேவை என்கிறோம். அரசதிகாரத்திலும் பங்கு பெறுவதை சமநீதி என்கிறோம். மனித நீதி பற்றி உரத்துப் பேசுகிறோம். உடைமையைப்

பொதுவாக்கு என்கிறோம். சமதர்மம் தவிர வாழ்வுக்கு வேறு நெறியில்லை என்கிறோம்.

தமிழ்ச் சமூகத்திற்குச் சாதி வேண்டாம் என்ற பொருளில் நெடுங்காலத்திற்கு முன்பு தமிழ்ச் சமுதாயத்தில் சாதி இல்லை என்கிறோம். ஒப்புரவு / சமதருமம்தான் தமிழர் நெறி என்கிறோம். நாம் அனைவரும் தமிழர் என்கிறோம். நமக்கிடையில் ஆதிக்கம் வேண்டாம் என்கிறோம். சாதி வேண்டாம் என்பதன் சரியான பொருள் சாதி என்ற படிமுறை அமைப்பினுள் பதிந்திருக்கின்ற ஆதிக்கம் வேண்டாம். உடமை வேண்டாம் என்பதாகத்தான் இருக்க முடியும்.

இப்பொழுது உறுதியாகச் சொல்லலாம். பழங்கால சமுதாயத்தை இனியும் நொந்து பயனில்லை. சாதியை தோற்றுவித்தவர் திராவிடரா? பார்ப்பனரா? என்று நமக்குள் பட்டிமன்றம் நடத்துவதில் பயனில்லை. ஏற்றத்தாழ்வுகள் பெருகிய சமூகச் சூழலில் சாதி அமைப்பு ஒரு பெரும் கொடுமையாக மாறி இருப்பதை இன்று நாம் நன்கு உணர்கிறோம். உடமையோடும், அரசு அதிகாரத்தோடும், மதத்தோடும் இன்று சாதிகள் இணைந்திருக்கின்றன. சாதி என்பது பெரும் நஞ்சாகி நம்மை நாசமாக்கிக் கொண்டிருக்கிறது. உடமை வேண்டும் என்போருக்கு இன்று சாதியில்லாமல் முடியாது. அரசதிகாரத்தில் ஏறிக்கொள்வோம் என்போருக்கும் இன்று சாதி இல்லாமல் முடியாது. உயர் சாதியினருக்கு சாதி ஒரு வலிமை, பாதுகாப்பு ஆதிக்கத்தில் இருப்பதற்கான ஆதாரம். சமூகப் படிக்கட்டில் தாழ்நிலையில் உள்ளவருக்கு சாதி ஒரு தண்டனை. மனிதத் தரத்தில் வாழ்க்கை மறுக்கப்பட்டவர்கள் இவர்கள். கலகம் செய்தாலொழிய இவர்கள் மனிதத் தரத்திற்குத் தம்மை உயர்த்திக் கொள்ள முடியாது. சாதி அமைப்பை இனியும் கட்டிக் காப்பாற்ற எவராலும் முடியாது. உச்சத்தில் இருப்பவர் ஆபத்தில் இருப்பவர். அதிகாரம் என்பது நிரந்தரமான பாதுகாப்பை யாருக்கும் வழங்குவதில்லை. சமதளத்தில்தான் எல்லோரும் பத்திரமாய் இருக்க முடியும். நில அதிர்வுகள் நிகழும் இந்தக் காலத்தில் சமதளத்தில் இருப்பதே எல்லோருக்கும் நல்லது. தமிழ்ச் சமூகத்திற்கு இனியும் சாதி வேண்டாம். தமிழராய் இணைவதில்தான் எல்லாருடைய முகங்களும் ஒளி பெறும். நெஞ்சங்களில் அன்பு பெருகும்.



# 8. தமிழ்த்தேசியத் திருமுகம்

தமிழ்த்தேசியம் என்ற அரசியல் இன்று முன்னுக்கு வந்துள்ளது. தமிழின் தொன்மை, தமிழ் வரலாற்றின் தனித்தன்மை, தமிழ்ப்பண்பாட்டின் மேன்மை என்பனவெல்லாம் தமிழ்த்தேசியம் என்ற அரசியல் நெறியின் வழியில் தான் இனி தமிழ் வரலாற்றில் நிலைபெறும்.

இவை குறித்து வாயளவில் பெருமை சொல்வது தமிழனை மலினப்படுத்தும். அன்றியும், முதலாளிய அரசியல்வாதிகளுக்குத் தமிழனை அடிமைப்படுத்தும். தமிழ்வாழ்வு என்பதன் சாரம் என்று சமதருமத்தைத் தான் சொல்லமுடியும். தமக்கென செல்வங்களையும் அதிகாரங்களையும் பெருமைகளையும் சேர்த்துக் கொள்ள முனைந்திருப்பவர்களுக்குள் தமிழின் ஆற்றல் தங்காது. இவர்களுக்கெல்லாம் தமிழ் தாயாக இருக்க முடியாது.

தமிழ் நிலத்தை அன்னியர் கைவசப்படுவது தொடர்கிறது. வடவர் மட்டுமே அன்னியர் அல்லர். சந்தைப் பொருளாதாரம் என்ற ஆதாரத்தில் ஆயிரம் கோடிகளை முதலீடு செய்ய வருகிறோம் என்பவர்களும் தமிழ்மக்களுக்கு அன்னியர் மட்டுமல்ல எதிரிகளும் ஆவார்கள். அன்னியச் செலாவணி இல்லாமல் நம்மால் வாழ முடியாது என்றும், ஏற்றுமதியின் தேவைக்காகத் தமிழகத்து வேளாண்மையை மாற்றியமைக்க வேண்டும் என்பவர்களும் அன்னியர்களின் பொருளியல் ஆதிக்கத்திற்கு மட்டுமல்லாமல்.

அரசியல் ஆதிக்கத்திற்கும் தமிழ்நாட்டைத் திறந்து வைப்பவர்கள். தோல் பதனிடும் தொழிற்சாலைகளும், சாயப்பட்டறைகளும், இறால் பண்ணைகளும் தமிழ்மக்களின் வாழ்வுக்கு ஆதாரமான நிலங்களையும் நீர்நிலைகளையும் நாசப்படுத்துவதன் மூலம் தமிழ்மக்களின் வாழ்வை அழிக்கின்றன. அண்மையில் தமிழகத்திற்கு வந்து சேர்ந்திருக்கிற கார் தொழிற்சாலைகள் புதியவகைக் கார்களை உற்பத்தி செய்து சந்தையில் விற்பனை செய்வதன் மூலம் தமிழ்ச் சமூகத்தின் ஏற்றத்தாழ்வை அதிகரிக்கவே செய்யும்.

தமிழ் மக்களைக் கூடுதலான சுரண்டலுக்கும் ஒடுக்குமுறைகளுக்கும் உள்ளாக்குவதன் மூலம் தான் முதலாளிகளும் அரசியல் அதிகாரத்தில் உள்ளவர்களும் கோடிக்கணக்கில் கொள்ளையடிக்கின்றனர். லாட்டரிச் சீட்டுகள், மதுபான வகைகள்,

பொழுதுபோக்குகள், பான்பராக்குகள் முதலியவற்றை அனுமதிப்பதன்மூலம் தமிழ் மக்களின் மனஉறுதியைக் குலைத்து, மலினப்படுத்தி, தன்மானத்தை அழித்து, எந்த ஆதிக்கச் சக்திக்கும் தமிழ்மக்களை இவர்கள் இரையாக்குகின்றனர். இவர்களெல்லாம் தமிழினத்தை ஆதிக்கச் சக்திகளுக்கு அடிமைபடுத்துபவர்கள். தமிழினத்தின் பகைவர்கள் வெளியிலிருந்து தமிழகத்திற்கு வந்தவர்கள் மட்டுமல்லர்: உள்ளிருந்தே உற்பத்தியாகுபவர்களையும் நாம் இங்கு எதிரிகள் என இனம் கண்டு கொள்ள வேண்டும்.

தமிழ்நாடு தமிழருக்கே என்று இந்தி எதிர்ப்புப் போரில் தீவிரம் கொண்ட நிலையில் பெரியார் அறிவித்தார். இது தமிழ்த் தேசியத்தின் ஆற்றல் மிக்க பெருங்குரலாக இன்றளவும் ஒலிக்கிறது. பெரியார் தம் இறுதியுரையில், தமிழ் மக்கள் தமக்கான அரசியல் அதிகாரத்தை முழு அளவில் பெற்றுக் கொள்ளாத வரை சாதியை, மதங்களை, பார்ப்பனியத்தை ஒழிக்க முடியாதென்றார்.

இந்திய அரசியல் சட்டத்தின் கீழ் அமைந்த அதிகார அரசியலைக் கடந்த 50 ஆண்டுகளாக நாம் பார்த்துவிட்டோம். இந்திய அரசியல் சட்டத்தின் ஆதாரமாகக் கூட்டாட்சி முறை இல்லை. இடைக்காலத்தில் பேசப்பட்ட சோசலிசமும் நடைமுறைப்படுத்தப்படவில்லை. மைய அரசின் அதிகாரங்கள் தொடர்ந்து அதிகரித்து வரும் நிலையில் மாநிலங்கள் தேய்ந்து வருகின்றன. வெளிநாட்டுக் கடன்களும், உள்நாட்டுக் கடன்களும் தொடர்ந்து அதிகரிக்கும் நிலையில் அரசதிகாரப் பீடங்கள், தம்மைப் பாதுகாத்துக் கொள்ளப் போக்கிரிகளோடு கைகோத்துக் கொள்கின்றன. எல்லா நிறுவனங்களும் கொஞ்சம் நஞ்சம் முன்பிருந்த சனநாயக நடைமுறைகளைத் தமக்குள்ளிருந்து வெளியேற்றுகின்றன. வெறுமையாக்கப்படும் மக்களின் மனங்களில் மதவாதம் குடியேறுகிறது.

இந்தியா முழுவதும் தேசிய இனங்களின் குரல்வளைகள் நெரிக்கப்படுகின்றன. அன்னியச் சக்திகளின் நிதியுதவி இல்லாமல் ஆட்சியில் இவர்கள் அமர்ந்திருக்க முடியாது. ஊழல்களை மட்டுமல்லாமல் பயங்கரவாதத்தையும் இவர்கள் தான் உற்பத்தி செய்கிறார்கள். அரசியல் அதிகாரத்தில் உள்ளவர்களும் அரசியல் அதிகாரத்தோடு கூட்டுச் சேர்ந்தவர்களும் இந்தியாவின் முதற்தரக் குடிமக்கள். எல்லா வசதிகளுக்கும், வாய்ப்புகளுக்கும் இவர்களே உரிமையுடையவர்கள். மற்ற அனைவரும் கடைத்தர மக்கள்; வறுமைக்கும், நோய்நொடிகளுக்கும்,



வேலையில்லா திண்டாட்டத்திற்கும், தொழிற்சாலைக் கழிவுகளுக்கும், கொள்ளை நோய்களுக்கும், அரசின் வன்முறைக்கும் இடங்கொடுத்து இவர்கள் அழிய வேண்டியவர்கள்.

இந்தச் சூழல்தான் இந்தியா முழுவதிலும் தேசிய இனங்களைக் கிளர்ந்தெழச் செய்திருக்கிறது. தமிழ்த்தேசியம் என்ற அரசியல் எழுச்சிக்கும் இந்தச் சூழல்தான் காரணம். மைய அரசு கூட்டாட்சி என்ற அடிப்படையில் அமைந்திருக்குமானால், சோசலிசம் நடைமுறைப்படுத்தப்பட்டிருக்குமானால் இன்று இந்தியா முழுவதும் கிளர்ந்தெழுந்திருக்கிற தேசிய எழுச்சிக்கு வாய்ப்பு இருந்திராது. இனிமேலும் இந்தியாவில் கூட்டாட்சி முறைக்கோ சோசலிச ஆக்கத்திற்கோ வாய்ப்பு உண்டா? என்று சிந்திக்கும்பொழுது, நம் நெஞ்சில் இருள் அடர்த்தியாகிறது. இடையில் எத்தனை பெரிய அதிகாரங்களும் கொடுமைகளும் ஆதிக்கங்களும் வந்து சேர்ந்துள்ளன? இந்தியாவில் ஏற்றத்தாழ்வுகள் எத்தனை பெரிய ஆழமான பள்ளங்களை ஏற்படுத்தியுள்ளன? வறுமைப்பிடிப்பில் 40 கோடி மக்கள். அன்னிய நிறுவனங்களின் ஆதிக்கம்.

இனி அரசை நம்பி ஆதிக்கவாதிகளோடு ஒத்துழைக்கும் அரசியல் கட்சிகளை நம்பி மக்கள் வாழ முடியாது. இனி மக்கள் இந்த அதிகாரப் பீடங்களிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டாட வேண்டும். இதற்குத்தான் தேசிய இன விடுதலை இயக்கங்கள்.

தேசிய இன விடுதலையை இன்றியமையாதது என நிர்ப்பந்திக்கிற இன்னொரு அரசியல் இன்று முன்னுக்கு வந்துள்ளது. இந்துத்துவம் என்ற மதவாத அரசியல் தான் இது. கலாச்சார தேசியம் என்ற கருத்தை முன்வைத்து இந்தியாவிற்கான ஒரு தேசியத்தை, இந்து தேசியத்தை இது வற்புறுத்துகிறது. இசுலாமியம், கிறித்துவம் மட்டுமல்லாமல் மார்க்சியத்தையும் இது அன்னியக் கலாச்சாரம் என்று சொல்லுகிறது. தேசிய இனங்களின் விடுதலைக்கான குரல்களை இராணுவம் கொண்டு ஒடுக்க வேண்டுமென்பதில் இது தீவிரம் காட்டுகிறது. இந்துமதம் என்பதன் பன்முகப் பரிமாணங்களை அழித்து இந்துமதத்திற்கு, ஒரே முகம் தான் உண்டு என்கிறது. இந்த முகம் பார்ப்பனிய முகம் / இந்தியாவிற்குச் சாதிகள் தேவை என்பது இந்த முகம்.

ஆரியர்களின் சமற்கிருதம் தான் இந்திய மொழிகளுக்கெல்லாம் தாய்மொழி. சாதி மதங்களை மறுக்கும் திராவிடம் இந்திய தேசியத்திற்கு

எதிரானது. பார்ப்பனரையும் கடவுளையும் மறுக்கும் திராவிட இயக்கத்தைக் களைந்தாக வேண்டும். இப்படிச் சொல்லும் இந்துத்துவம் தமிழ்த் தேசியத்திற்கும் முற்றிலும் எதிரானது. அம்பேத்கர் மட்டுமல்லாமல், திருவள்ளுவரையும், பாரதியையும் இந்துத்துவம் தமக்கு உரிமை கொண்டாடுகிறது. தமிழனின் தொன்மையான வரலாறும் தனித்தன்மையும் இந்துத்துவத்திற்கு உடன்பாடு இல்லை. தமிழ்ச் சமூகத்திற்கு உள்ளிருந்தே இந்துத்துவம் தனக்கான சக்திகளைத் திரட்டுவதில் முந்துகிறது.

திராவிட இயக்கத்தின் உள்ளிருந்து தான் தமிழ்த் தேசியம் என்ற அரசியல் எழுந்தது என்றாலும் இந்த அரசியலின் வளர்ச்சிக்குத் திராவிட இயக்கங்கள் இன்று உறுதுணையாக இல்லை. சந்தைப் பொருளாதாரம் என்ற பொருளியலோடும், மைய அரசின் அதிகார அரசியலோடும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைமையிலுள்ள தமிழக அரசு ஒத்துழைக்கிறது. இந்தி ஆதிக்கத்தை அனுமதிக்க மாட்டோம் என்றாலும் தமிழகத்தில் ஆங்கில ஆதிக்கத்தை வளர்ப்பதில் தமிழக அரசின் பங்கு பெரிது. தேர்தல் நடைமுறையை ஒப்புக் கொள்கிற அதே சமயத்தில், சாதிக்கும் – மதத்திற்கும் எதிராகத் திராவிட முன்னேற்றக் கழகம் செயல்பட முடியாது. திரைப்படம், மதுபானம், நவீன நாகரிகம் முதலியவற்றோடு முழு அளவில் ஒத்துழைப்பதன் மூலமும் தமிழக மக்களுக்குச் செய்யும் அநீதி குறித்து என்ன சொல்வதற்கிருக்கிறது?

தமிழ் மக்களைச் சுரண்டுவதிலும் ஒடுக்குவதிலும் கழக அரசு முனைந்திருக்கிறது. பார்ப்பனியத்தையும் கழக அரசு பாதுகாக்கத்தான் செய்கிறது. மாநில சுய ஆட்சி என்பதும் கூட்டாட்சி என்பதும் ஒன்றல்ல என்பது மட்டுமல்ல. ஒன்றுக்கு மற்றது எதிரானது.

தமிழகத்தில் இந்துத்துவ மதவாத, அரசியலின் வளர்ச்சியைத் திராவிட இயக்கம் தடுக்கும் திறனோடு செயற்படவில்லை. பெரியாரியத்தின் மையம் என்று சமதருமத்தைத் தான் சொல்லமுடியும். சாதியும் மதமும் ஒழிந்த பிறகு தான் சமதருமம் என்பது சாத்தியம் இல்லை. சாதி, மதம், பாரிப்பனியம் என்பதற்கு எதிராகப் பேசும் திராவிட இயக்கம், தனியுடைமையின் வக்கிரம் குறித்தோ சந்தைப் பொருளாதாரத்தின் ஊடுருவலால் தமிழ்ச் சமுதாயத்தின் ஆதாரங்கள் அழிவது குறித்தோ கவலைப்படுவதில்லை.

மதம் என்பதை மூடத்தனம் என்றும் அபின் என்றும் தொடர்ந்து



சொல்வதன் மூலம் மக்களை இந்துத்துவம் நோக்கித் தள்ளுகிற செயலைத்தான் திராவிட இயக்கம் செய்துவருகிறது. தமிழ் மக்களுக்குச் சாதி தேவையில்லை. மதம் தேவையில்லை, கடவுள் தேவையில்லை என்று சொல்வதனால் வரலாற்றில் தமிழ் மக்களுக்குச் சாதி இல்லை, மதம் இல்லை என்று சொல்லிவிட முடியாது. மதங்களும், புராணங்களும் வரலாற்றுச் சூழலில் மனிதனின் படைப்புகள். இவற்றையெல்லாம் ஒட்டுமொத்தமாக ஒதுக்கிவிட்டு வரலாற்றை வரையறுக்க முடியாது.

தமிழ்த்தேசியம் என்ற அரசியலை முன்னெடுத்துச் செல்லும் முறையில் தமிழ் வரலாறு முதலியவற்றை ஒரு மறு ஆய்வுக்கு நாம் உட்படுத்தத்தான் வேண்டும். திராவிடத் தேசியம் என்பது, இந்தியத் தேசியம் என்பதைப் போலவே ஒரு மாயை என்று அறிஞர் குணா ஆராய்ந்துரைக்கிறார். திராவிட நாடு என்ற கோரிக்கையை முன் வைத்து அரசியல் இயக்கத்தைப் பெரியார் செயற்படுத்தவில்லை. பார்ப்பனருக்கு எதிரான இயக்கத்தால் பயன்பெற்றவர்கள் தமிழர் அல்லாதவரும் தான். தமிழ் இன்று பயிற்சி மொழியாக, ஆட்சி மொழியாக, வழிபாட்டு மொழியாக, நீதிமன்ற மொழியாக வளர்ச்சி பெறாததற்குக் காரணம் என்று தமிழகத்திலுள்ள தமிழரல்லாதவர்களைச் சுட்டிச் சொல்வதில் தவறில்லை. இவர்கள் தான் இந்துத்துவத்தோடும் கைகோத்துக் கொள்பவர்கள். தமிழ்த்தேசிய இன உணர்வை வெறியாக மாற்றுவதிலும் ஆபத்து உண்டு என்பதை நம்மவர் புரிந்து கொள்ள வேண்டும்.

தமிழ்த்தேசியத்தை முன்னெடுத்துச் செல்லும் இயக்கங்கள் இன்று வளர்ந்து வருகின்றன. தமிழ்மொழி என்றும், இனம் என்றும் பேசுவதன் மூலம் தமிழ்த்தேசிய அரசியலை தமிழ்மக்களுக்குரிய அரசியலாக மாற்றிவிட முடியாது. இயற்கையென்றும், நிலம், நீர் என்றும், வேளாண்மை என்றும், தமிழ்மக்களுக்கான கல்வி என்றும் தமிழ் மக்களை நாம் நெருங்க முடியும். சந்தைப் பொருளாதாரத்தின் விளைவாக மக்கள் மீது, குறிப்பாக உழவர்கள் கைவினைஞர்கள், பெண்கள், தலித் மக்கள் மீது சுரண்டலும் ஒடுக்குமுறையும் அதிகரிக்கும் என்ற உண்மையைச் சுட்டிக் காட்டுவதன் மூலமே இவர்களை தமிழ்த்தேசியம் என்ற அரசியலுக்குள் கொண்டு வர முடியும்.

இலக்கியத் திறனாய்வு என்பதுகூட இறுதியில் மக்கள் விடுதலையைத் தான் இலக்காகக் கொண்டிருக்கும் என்பதைப் புரிந்து கொண்டால் தமிழ்ப் படைப்பாளிகளும் திறனாய்வாளர்களும் தமிழ்த்தேசிய

அரசியல் வளர்ச்சிக்குக் கைகொடுப்பார்கள். தமிழ் மக்களுக்கான அரசியல் அதிகாரத்தை வென்றெடுப்பதன் மூலம் தான் சாதி, மதம், பார்ப்பனியம் ஆகியவற்றை ஒழிக்க முடியும் என்ற பெரியாரின் கூற்றை முதலாளிய தனியுடைமை ஆதிக்கத்திற்கும் அரசியல் அதிகாரப் பெருக்கத்திற்கும் நாம் விரிவுபடுத்திப் புரிந்து கொள்ள முடியும்.

உலகில் தமிழன் தன்னைத் தக்க வைத்துக் கொள்ள, தன் வரலாற்றைத் தக்கவைத்துக் கொள்ள, தனக்கான விடுதலையைப் பெற, தனக்குள்ளிருந்து படைத்துக் கொள்ள வேண்டியது இந்தத் தமிழ்த்தேசியத் திருமுகம்.



# 9. வரலாற்றில் தமிழ்த்தேசியம்

தமிழ்த்தேசியம் என்ற அரசியல் குறித்துப் பேசும்போது தேசியம், தேசிய இனம் என்பதற்கான ஸ்டாலினிய வரையறைகள் குறித்தும் ஒரு மறு ஆய்வு செய்ய வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு தேசிய இனத்திற்கும் அதற்கேயான மொழி, அந்த மொழி வழங்கும் வரையறுக்கப்பட்ட எல்லைகளை உடைய ஒரு பிரதேசம். இந்தப் பிரதேசத்தில் கூடிய வரை ஒருங்கிணைந்ததாகச் செயல்படும் பொருளாதாரம் மற்றும் தொடர்ச்சியான வரலாற்று அடிப்படையில் உருவான பண்பாடு என நான்கு வரையறைகளை ஸ்டாலின் முன்வைத்தார்.

அய்ரோப்பாவில் நிலமானியப் பொருளியல் அமைப்புக்கும் கத்தோலிக்கத் திருச்சபைக்கும் எதிராகத் தொழிற்புரட்சியின் அடிப்படையில் முதலாளியம் தன் ஆளுகையை நிலைநிறுத்திய சூழலில் தேசங்கள் உருவாயின என்பது வரலாறு. நாளடைவில் கத்தோலிக்கத் திருச்சபையின் பிடியிலிருந்து தேசங்கள் விடுதலை பெற்றன. நிலமானியப் பொருளியல் அமைப்பு தகர்ந்து, முதலாளியம் மேல்நிலைக்கு வந்தது. முதலாளியம் தன் ஆட்சியை நிறுவுவதற்காக மொழியென்றும் வரலாறென்றும் பண்பாடு என்றும் பொருளியல் என்றும் பேசியது.

நில உடமை ஆதிக்கத்திலிருந்தும் கத்தோலிக்க மதத்திலிருந்தும் விடுவிக்கப்பட்ட உழைக்கும் மக்களைக் கொண்டு தமக்கான ஆட்சியை, தமக்கான தேசத்தைக் கட்டமைத்துக் கொள்ள முதலாளிகள் முனைந்தனர். இதற்காக சனநாயகம் என்றும் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்றும் பரப்புரை செய்தனர் / இவையெல்லாம் உழைக்கும் மக்களுக்கு எந்த அளவு வந்து சேர்ந்தன என்பதையும் வரலாறு நமக்குச் சொல்லுகிறது.

உழைக்கும் மக்களைக் கொண்டு தமக்கான தேசத்தை, பொருளாதாரம், பண்பாடு, வரலாறு முதலியவற்றைப் படைத்துக் கொள்ளவே முதலாளிகள் விரும்பினர்.

ஸ்டாலின் முன்வைத்த தேசிய இனம் என்பதற்கான வரையறைகள் முதலாளிய வரையறைகள் தான் என்பதை வரலாறு நமக்கு உணர்த்துகிறது. முதலாளிகளின் உருவாக்கம்தான் தேசம். அதாவது தேசம் என்பது முதலாளிய நலன்களை உள்ளடக்கிய ஒரு கட்டமைப்பு. இதைத்தான் புனைவு என்றும் கற்பிதம் என்றும் நண்பர்கள் குறிப்பிடுகின்றனர்.

ஒரு நாற்காலியென்பதும் வீடு என்பதும் எப்படி ஒரு கட்டமைப்போ அதேபோல்தான் தேசம் அல்லது தேசியம் என்பது. தேசம் என்பது நிரந்தரமானதில்லை முதலாளிகள் உருவமைத்த தேசம் என்பது உழைக்கும் மக்களுக்கு உரிமையான தேசமாக என்றும் ஆகாது. உழைக்கும் மக்களைப் பயன்படுத்தி அவர்களைச் சுரண்டியும் ஒடுக்கியும் தமக்கான பொருளாதாரம் வரலாறு என்பதை உருவாக்கி வைத்திருப்பவர் முதலாளிகள். முதலாளி முன்வைக்கும் வரலாறும் பண்பாடும் அதே வடிவத்தில் உழைக்கும் மக்களுக்கானவையாக இருக்க முடியாது. நம் அனைவருக்கும் ஒரே மொழி ஒரே வரலாறு ஒரே பண்பாடுதான் என்று முதலாளிகள் சொல்வது கண்டு உழைக்கும் மக்கள் ஏமாந்துவிடக் கூடாது.

முதலாளியின் தேசத்தில் உழைக்கும் மக்கள் கூலி அடிமைகள், முதலாளியின் பொருளாதாரத்தை ஒப்புக் கொண்டால் உழைக்கும் மக்களுக்கு விடுதலை இல்லை. அதே வரலாறு அல்லது பண்பாட்டுக்குள் உழைக்கும் மக்கள் தம்மை அடைத்துக் கொள்ள முடியாது இதன் காரணமாகத்தான். ஸ்டாலின் முன்வைத்த வரையறைகள் இன்று கேள்விக்குள்ளாகியுள்ளன.

முதலாளியத்தைக் கடந்து சோசலிசம் என்ற சமூக அமைப்புக்குள் சென்றாலொழிய உழைக்கும் மக்கள் தமக்கான விடுதலையை, தேசத்தை, மொழியை, பொருளாதாரத்தை வரலாற்றைப் பண்பாட்டை பெற இயலாது. இம்முறையில் ஸ்டாலினின் வரையறைகளை சீர்படுத்துவதும் சிலவற்றைச் சேர்த்துக் கொள்வதும் இன்று நமக்குத் தேவையாயிருக்கிறது. எல்லோருக்குமான வாழ்வு என்ற முறையில் சமதர்மம் என்பதையும் சாதிகளோ மத ஆதிக்கமோ வேண்டாம் என்ற முறையில் சமனியத்தையும் நாம் இணைத்துக் கொள்ள வேண்டியதாகிறது.

தமிழ்த்தேசியம் என்ற அரசியலுக்கு இந்த உண்மைகளை இப்பொழுது பொருத்திப் பார்க்கலாம் தொல்காப்பியர் காலத்திலேயே தமிழ் மொழி பேசும் நிலத்தின் எல்லைகள் குறிக்கப்பட்டிருந்தன வடக்கில் வேங்கடம் தெற்கில் குமரி கிழக்கிலும் மேற்கிலும் கடல்கள். இவை தமிழ் நிலத்தின் எல்லைகள்.

தமிழ் உணர்வு இங்கு ஏற்பட்டிருந்தது என்பது உண்மை. ஆனால் இங்கு தமிழ்த்தேசம் ஏற்படவில்லை. மூன்று மூவேந்தர்கள் தமிழ்நிலத்தை ஆட்சி செய்தனர். தமிழகம் பனிரெண்டு நாடுகளாக பிரிவுபட்டு இருந்தது



என்பதும் ஒரு வரலாற்று உண்மை. மூவேந்தர்களில் இருவர் அல்லது மூவர் ஓரிடத்தில் கூடியிருந்த காட்சிகளைக்கூட ஓர் அற்புதம் என்ற முறையில் புலவர் பாடினர்.

இப்பொழுதும் ஒரு தேசம் என்பது தோன்றிவிடவில்லை முதலில் பல்லவர்களும் பிறகு தெலுங்கர்களும் இசுலாமியரும் தமிழ் நிலத்துக்குள் வந்து தம் ஆட்சியை நிறுவியபோது தமிழ் உணர்வும் சிதையத்தான் செய்தது இராஜராஜன் முதலிய ஒரு சில மன்னர் காலத்தில் தமிழ்நிலம் ஒருவரது ஆட்சியில் இருந்தது என்பதைத்தவிர மக்கள் பங்கு பெறாத மன்னர் ஆட்சியில் தேச உருவாக்கத்திற்கு வழியில்லை.

பத்தொன்பது இருபதாம் நூற்றாண்டுகளில்தான் நாம் எல்லோரும் தமிழர் என்ற மொழி உணர்வோடு நமக்கு ஒரு தேசம் தேவை என்ற உணர்வும் ஏற்பட்டது. முதலில் தமிழ் அறிஞர்களிடத்திலும் பிறகு மெல்ல மெல்ல பொதுமக்களின் ஒரு பகுதியினரிடத்திலும் இந்த உணர்வு பரவியது. தமிழ் நாகரிகத்தின் தொன்மை சங்க இலக்கியத்தின் மேன்மை சங்க காலத்தில் பரவலாக மக்களோடு மன்னர்கள் கொண்டிருந்த நெருக்கமான உறவு. தமிழ்ப் பண்பாட்டின் தனித்தன்மை தமிழர்களின் சிற்பத்திறன் மேன்மையான கட்டிடக்கலை தமிழ்மக்களுக்குரிய மருத்துவம், இவைபற்றிய முன்னைய வரலாறு குறித்து அறிந்த நிலையில் மீண்டும் நமக்கொரு தேசமும் வரலாற்று மேன்மையும் வாய்க்க வேண்டுமென்று தமிழ் சார்ந்த, அரசியல் உணர்வுகொண்டோர் கருதினர். மெல்ல மெல்ல இந்த தமிழ் உணர்வு தமிழ் அரசியலாக வடிவம் பெற்றது திராவிட இயக்கம் இந்த உணர்வை வளர்த்தெடுத்தது என்பதில் அய்யமில்லை.

இந்தியத் தேசியம் என்ற கருத்தாக்கம் எழுந்த சூழலில் தமிழ்த் தேசியம் தன்னைப் படைத்து வளர்த்துக் கொள்வதற்காகக் கடுமையாகப் போராட வேண்டி வந்தது. இந்தியத் தேசியத்தின் தோற்றத்தோடு பார்ப்பனர் உறவு கொண்டிருந்தனர். ஆகவே இவர்களைக் கடுமையாக எதிர்க்க வேண்டியிருந்தது. நீதிக்கட்சியின் தோற்றத்தை இவ்வாறு புரிந்து கொள்கிறோம். நீதிக் கட்சியின் கோட்பாடாகத் திராவிடத் தேசியம் இருந்தது. எனினும் அது வளர்ச்சிபெற வாய்ப்பில்லை. திராவிடத் தேசியத்திலிருந்து தமிழ்த்தேசியம் தன்னை விடுவித்துக் கொள்வதற்கும் தேவையிருந்தது. தமிழ்மக்கள் மத்தியில் சாதி மதம் பார்ப்பனியம் முதலியவற்றைக் கலையவேண்டுமென்றால் தமிழ்மக்கள் தமக்கான அரசியல் அதிகாரத்தை முற்றாகப் பெறாமல் முடியாது என்ற பெரியாரின்

இறுதிப் பேருரை தமிழ்த்தேசிய அரசியலுக்கான முதல் அடிக்கல் என்று உறுதியாகச் சொல்லலாம்.

தமிழ்த்தேசியம் என்ற அரசியல் தமிழ் நிலத்தில் வளர்ச்சி பெறுவதற்குக் காரணமாகவும் தடைகளாகவும் இருந்தனவென்று பிரிட்டன் இங்கு நிலைநிறுத்திய தரகு முதலாளியத்தையும் அதனோடு ஒத்துழைத்த இந்தியப் பெரு முதலாளிகளையும் நாம் இனங்காணமுடியும். நிதிக்கட்சியின் செயல்பாட்டுக்குள் குறைந்த அளவுக்கேனும் திராவிட / தமிழ்த்தேசிய முதலாளிகளைக் காண முடியும். வடநாடு வாழ்கிறது தென்நாடு தேய்கிறது என்ற திராவிட முன்னேற்றக் கழகத்தின் குரல் முதலாளியப் பொருளாதாரம் வேண்டிய தமிழ்த் தேசியக்குரல். இடித்தால் இரும்பென்றும் தட்டினால் தங்கமென்றும் தமிழ்நிலத்தின் தாதுவளம் நிலவளம் நீர்வளம் குறித்தெல்லாம் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் பேசினர். தமிழ் மக்களைத் திரட்டினர். டாடா பிர்லா மற்றும் மார்வாடி முதலியவர்களுக்கு எதிர்க்குரல் எழுப்புவதில் இவர்கள் சளைக்கவில்லை. தனிநாடு தேவை. தமிழ்நாட்டுக்கான பொருளாதாரம், சமதர்மம் தான். தமிழர் பண்பாட்டில் ஆரியர் வழியே உட்புகுந்த சாதி மதங்களைக் களைய வேண்டும். இத்தகைய பரப்புரைகள் தமிழ்தேசிய ஆக்கத்திற்குரியவை.

தமிழ்நாடு என்ற பெயரிட்டது, தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் முதலியனவும் இதனோடு சேர்ந்தவை. இலக்கியத் திறனாய்வு என்ற முறையிலும் தமிழ்த்தேசிய உணர்வு உறுதியாக ஒரு காலத்தில் செயல்படத்தான் செய்தது. ஆரியத்தின் சார்பில் இருந்து தமிழைத் தூய்மைப்படுத்தும் இயக்கங்களும் உறுதியாக செயல்பட்டன. மறைமலை அடிகள், சோமசுந்தரபாரதியர், பாவாணர் தொடங்கி எத்தனையோ தமிழ் அறிஞர் தமிழ்த்தேசிய உணர்வோடு செயல்பட்டனர்.

தமிழ்த்தேசியம் என்ற அரசியலை முழு அளவில் வளர்த்தெடுக்கும் நோக்கில் திராவிட முன்னேற்றக் கழக அரசு செயல்படவில்லை. சந்தைப் பொருளாதாரம் என்ற முறையில் மார்வாடிகளோடு பன்னாட்டு நிறுவனங்களுக்கும் இடம் கொடுக்கும் போக்கு தமிழ் நிலத்தையும், நீர், காடு முதலிய வளங்களையும் நாசமாக்குவதின் மூலம் தமிழ் மக்களின் வாழ்வுக்கான ஆதாரங்களை அன்னியர்களுக்கு உரிமைபடுத்துகிறது.

தமிழ்த்தேசியம் என்ற உடனே தனிநாடொன்றோ விடுதலையென்றோ பேசவேண்டியதில்லை. மைய அரசும் மாநில அரசும்



சமத்துவநிலையில் இருந்து செயல்படுவதற்கான கூட்டாட்சியை ஏற்படுத்த இயலுமானால் தமிழகத்தினுள் அன்னியர் ஆதிக்கத்தை தடுக்கமுடியும். மாநில எல்லைக்குள் மைய அரசின் அலுவலகங்களிலும் தமிழ் நிர்வாக மொழியாகும் தமிழ் நிலத்திற்குள் வரும் அன்னியர்கள் நம் அனுமதிபெற்றே தொழில் செய்ய முடியும். தமிழ் மக்களுக்கான வேளாண்மை, கல்வி, மருத்துவம் முதலியவற்றை நாம் வளர்த்தெடுக்க வேண்டும். இறுதியாக எல்லாவற்றையும் மக்கள் தீர்மானிக்கும் முறையில் அரசியலும் பொருளியலும் செயல்பட வேண்டும். தேவையென்றால் மைய அரசிலிருந்து வெட்டிக் கொள்ளும் உரிமையும் நமக்கு வேண்டும். தமிழ் மக்களுக்கான பண்பாடென்பது சமதர்மமாகத் தான் இருக்க முடியும். இராசராசனுக்கு விழா எடுக்க முடியாது. சேரன் செங்குட்டுவன் படையெடுப்பை நாம் போற்ற முடியாது. ஆடம்பரமான பாராட்டு, பெருமை பேசுதல், திருமண நடைமுறை என்பனவெல்லாம் தமிழ் வாழ்வியலை அழிக்கும். மக்கள் சார்பில் தமிழ்த் தேசிய அரசியலை வளர்த்தெடுக்கும். சில முனைப்பான முயற்சிகள் என்று இவற்றைக் கூற முடியும்.

சமதர்மத்திற்கான திட்டங்களைத் தீட்டி அவற்றைச் செயல்படுத்த தமிழக அரசால் இயலாது என்ற போதிலும், சீர்கெட்ட முதலாளியத்தைச் செயல்படுத்துவதில் முனைந்துள்ள தமிழக அரசு தமிழ் மக்களின் நலன்களுக்கு எதிராகத்தான் செயல்படுகிறது. இதன் காரணமாக முன்பு குறைந்த அளவுக்கேனும் தமிழ்த்தேசிய அரசியலில் அக்கறை கொண்டிருந்த கழக அரசு இப்பொழுது தமிழ்த்தேசியத்திற்கு எதிராகத்தான் சென்று கொண்டிருக்கிறது என்று உறுதியாகச் சொல்ல முடியும். முதலாளியத்திற்கு இடம் கொடுக்கிற எந்தவிதமான திராவிட இயக்கமும் தமிழ்த்தேசிய அரசியலுக்கு எதிராகத்தான் செயல்பட முடியும். தமிழ்த்தேசிய அரசியலை முன்னெடுத்துச் செல்லாத மார்க்சிய கட்சி அரசியலை மார்க்சியத்திற்கெதிரான அரசியலென்றே நாம் மதிப்பிட முடியும்.

தமிழ்த்தேசிய உணர்வை சாதாரண மக்களின் உள்ளும் வளர்த்தெடுக்கப்பட்டாலொழிய தமிழ் மக்களுக்கான பொருளாதாரம் முதலியவற்றை எதிர்காலத்தில் மட்டுமல்லாமல் நிகழ்காலத்திலும் தக்க வைத்துக் கொள்ள முடியாது. ஆங்கிலத்தைப் பயிற்சி மொழியாக வைத்துக்கொண்டு எப்படி தமிழ் உணர்வை மக்களுக்கு ஊட்ட முடியும்? தரமான தமிழ்க்கல்வியை அனைவருக்கும் தரவில்லையென்றால் இவர்களுக்கு எங்கிருந்து வரலாற்று உணர்வு வந்து சேரும். லாட்டரிச் சீட்டு மதுபானக்கடைகள் பொழுதுபோக்குகள் திரைப்படங்கள்

ஆடம்பரமான வாழ்க்கை வசதிகள் நுகர்வு வெறி முதலியவற்றில் தமிழ் மக்களை ஆழ்த்தி தமிழ்மக்களின் தன்மான உணர்வையும் மன உறுதியையும் அழித்து தமிழ் உணர்வை வளர்க்க முடியாது.

தமிழ் உணர்வு என்பது தமிழன் தன்னை வரலாற்றில் தக்கவைத்துக் கொள்ளும் உணர்வு. வள்ளுவர், இளங்கோ, சாத்தனார், சித்தர்கள் முதலியோர்கள் வழியே பாரதிக்குள்ளும், பாரதிதாசனுக்குள்ளும் பெரியாருக்குள்ளும் வளர்ந்து செழித்திருக்கிற உணர்வு. சந்தைப் பொருளாதாரம் என்ற பெயரில் நவீன அறிவியலுக்கும் தொழில் நுட்பங்களுக்கும் மூலதனப் பெருக்கத்திற்கும் இடங்கொடுத்து தமிழ் மக்களின் வாழ்வியல் ஆதாரங்களை அழிக்கக் கூடாது என்பது தமிழ் உணர்வு. முதலாளிகளுக்கும் ஊழல் மிக்க அரசியல்வாதிகளுக்கும் தம் வாழ்வை அடிமைப்படுத்திக் கொள்ளக் கூடாது என்ற சுதந்திர உணர்வும், எல்லா வகை ஆதிக்கத்திற்குள்ளிருந்தும் நம்மை நாமே விடுவித்துக் கொள்ள வேண்டும் என்ற விடுதலை உணர்வும் சமதர்ம வாழ்வில்தான் சாத்தியம். தமிழும் தமிழ் இனமும் தமிழ் நலமும் தழைக்க முடியும் என்பதும் தமிழ்த்தேசியத்தின் உள்ளடக்கம்

"என்று தணியும் எங்கள் சுதந்திர தாகம்
என்று தணியும் எங்கள் அடிமையின்மோகம்."

"எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழ் என்று சங்கே முழங்கு"

பாரதியும் பாரதிதாசனும் என்றும் நமக்குள் எழில் முகங்களோடு சிறந்திருக்க நாம் செயற்படுத்த வேண்டியது தமிழ்த்தேசிய அரசியல்.



## 10. 'ஒவ்வொரு நாளும் தமிழ்த்தேசியம்'

தேசிய இனச்சிக்கல் என்பது இந்தியாவில் மட்டும் இன்று எழுந்துள்ள சிக்கல் அன்று. ஒன்றுக்கு மேற்பட்ட தேசிய இனங்களைக் கொண்ட அநேகமாக எல்லாத் தேசங்களிலும் இந்தச் சிக்கல் அழுத்தம் பெற்றும் வெடித்தும் வருகிறது. டிட்டோ அவர்களின் காலத்தில் இணைந்திருந்த யுகோஸ்லேவியா அண்மைக்காலத்தில் சிதறியதை நாம் பார்த்தோம். யுகோஸ்லேவியாவின் அல்பேனியர்கள் இன்று கடுமையாகப் போராடி வருகிறார்கள். செர்பியாவிற்கு எதிராக நேட்டோ படைகள் கடுமையான விமானத் தாக்குதல் தொடுத்து வருவது குறித்தும் செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன. திமோர்தீவு பிரிந்து செல்வதை இந்தோனேசிய அரசு கொள்கை அளவில் ஒப்புக்கொண்ட போதிலும் இராணுவம் மறுப்பதன் விளைவுகளைத் திமோரில் இன்று பார்க்கிறோம்.

ஒன்றுக்கு மேற்பட்ட தேசிய இனங்கள் வாழும் ஒரு தேசம் இராணுவத்தைப் பெருக்கித்தான் தேசிய இன எழுச்சியை ஒடுக்கி வைத்திருக்கிறது. எல்லாத் தேசங்களிலும் இராணுவம் மட்டுமல்லாமல் மைய அரசும் தொடர்ந்து தன்னை வலுப்படுத்திக் கொண்டுதான் வருகிறது. பொருளாதார வளர்ச்சிக்குத் தேவை என்று சொல்லி மேற்கத்திய வல்லரசுகளின் ஊடுருவலை ஏற்றுக்கொள்ளும் எந்த அரசும் தனது தேசத்திலுள்ள மக்களின் மீது கூடுதலான சுரண்டலையும் ஒடுக்குமுறையையும் திணிக்க வேண்டி இருக்கிறது. அதிகளவில் அரசு ஊழியர்களையும் கட்சிகளையும் முதலாளிகளையும் சார்ந்தியங்கும் அரசு தவிர்க்க இயலாமல் உழைக்கும் மக்களைக் கடுமையாக ஒடுக்குவதையும் நம்மால் புரிந்து கொள்ள முடியும்.

அரசு ஊழியர்கள் மட்டுமல்லாமல் தொடர்ந்து பெருகிவரும் படித்த நடுத்தர வர்க்கமும் மக்களுக்கெதிராகத்தான் சென்று கொண்டிருக்கிறது. இம்முறையில் எல்லா தேசங்களிலும் ஏற்றத்தாழ்வுகள் அதிகரித்து வருகின்றன. அமெரிக்கா உட்பட மேற்கத்திய நாடுகளிலும்கூட இத்தகையப் போக்கு தொடர்ந்து அதிகரித்து வருகிறது. தவிர்க்க இயலாமல் எழுச்சி பெறும் தேசிய இனங்களின் போராட்டத்திற்கு இதுதான் அடிப்படை.

கனடாவிலிருந்து கியுபெக் மாநிலம் பிரிந்து செல்லும் என்பது அநேகமாக உறுதிப்படுகிறது. ஸ்பெயினிலிருந்து காட்டலோனியா மாநிலம்

பிரிவினை வேண்டுகிறது. பிரிட்டனிலுள்ளும் ஸ்காட்லாந்து தன்னாட்சி கோருகிறது. சோவியத் யூனியன் தகர்ந்து பல்வேறு தேசிய இனங்களும் தமக்கென தனிநாடுகளைப்படைத்துக் கொண்டது அண்மைக்கால வரலாறு / இரசியக் குடியரசில் இருந்தும் சச்சன்யா பிரிவினை கோரி வீரம் செரிந்த போராட்டம் நடத்தி வருவதை நாம் பார்க்கிறோம். செக்கோஸ்லேவேகியாவும் இரண்டு தேசங்களாக அண்மைக்காலத்தில் அமைதியாகப் பிரிந்தது. ஒன்றுக்கு மேற்பட்ட தேசிய இனங்களைக் கொண்ட தேசம் எதுவும் இனி அமைதியாக இருக்க முடியாது. (இங்கெல்லாம் தேசம் என்று நாம் குறிப்பிடுவது கூட மரபு வழியே வந்த பொருத்தமில்லாதச் சொல்முறைதான்).

சீனாவிலிருந்து திபெத் என்றேனும் பிரியத்தான் செய்யும். இரசியக் குடியரசிலிருந்தும் இன்னும் சில தேசிய இனங்கள், இனக்குழுக்கள் பிரிந்து செல்வதைத் தவிர்க்க இயலாது. இதைப்போல எதிர்காலத்தில் ஆப்பிரிக்காவில் இந்தச் சிக்கல் கடுமையாகலாம். இந்தியாவினுள்ளும் சத்தீஸ்கர், உத்ரகண்ட், ஜார்கண்ட் முதலியவற்றைத் தனி மாநிலங்களாக உருவாக்க வேண்டும் என்று கோரிக்கையை மைய அரசால் மறுக்க இயலவில்லை. ஆந்திராவிலிருந்தும் தெலுங்கானா பிரியத்தான் விரும்புகிறது. ஒரு மொழி வழங்கும் பிரதேசத்தினுள்ளும் பொருளியல் காரணங்களுக்காக இப்படித் தனிமாநில கோரிக்கை எழத்தான் செய்கிறது. ஸ்டாலின் வகுத்த தேசிய இனம் குறித்த வரையறைகளை நாம் திரும்பத் திரும்ப மறு ஆய்வுக்கு உட்படுத்துவதில் தவறில்லை.

இந்தியாவிலும் பொருளாதார வலிமை மிக்க அந்நியர்களின் ஊடுருவல் தொடர்ந்து அதிகரிப்பதன் ஒரு விளைவுதான் இத்தகைய தனிமாநில கோரிக்கைகள். மாநிலங்களுக்குக் கூடுதலான அதிகாரம் என்ற முறையில் மக்களின் பொருளியல் முதலிய சிக்கல்களுக்குத் தீர்வு ஏற்பட்டுவிடும் என்பது ஒரு வெற்றுக்கற்பனை. மாநில சுயாட்சி என்பதும் தேசிய இனத்திற்கான தன்னுரிமை என்பதும் ஒன்று அல்ல. தேசிய இனங்களின் தன்னுரிமையை முழு அளவில் ஏற்றுக்கொள்வதாகிய கூட்டாட்சி முறைக்கு எந்த வகையிலும் மாநிலத் தன்னாட்சி என்பது மாற்றாக இருக்க முடியாது.

தமிழ்த்தேசத்தின் தன்னுரிமை என்று நாம் இன்று பேசும்பொழுது உலகளவிலான இந்தச் சிக்கலின் பின் புலத்தோடுதான் சிந்திக்கக் கடமைபட்டுள்ளோம். இராணுவப் பெருக்கம் குறித்தும் மையத்தில்



மட்டுமல்லாமல் மாநிலங்களிலும் அதிகாரம் குவிவது குறித்தும் நாம் சிந்திக்க வேண்டும். அந்நியர்களின் பொருளியல் ஊடுருவல்கள் அதிகரிப்பது குறித்தும் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். இந்தியாவில் பெருகிவரும் முதலாளியம், தொழில்வளர்ச்சி என்ற முறையில் மக்களின் வாழ்வுக்கு ஆதாரமான இயற்கை வளங்களை நாசப்படுத்தி வருவது குறித்தும் சமூக வாழ்வில் ஊழல் முதலியவற்றைத் திணிப்பதில் அரசு அதிகாரம் தொடர்ந்து வெற்றி பெறுவது குறித்தும் தேர்தல் முறையை நம்பியுள்ள கட்சிகள் மக்களின் மத்தியில் சாதி, மத உணர்வுகளைத் தூண்டிவருவது குறித்தும் கவனத்தோடு சிந்திக்க வேண்டும். அதிகாரத்தைப் பங்கிட்டுக் கொள்ள விரும்பும் அனைத்துக் கட்சிகளும் சனநாயகப் போக்கை அழிப்பதில் முனைந்துள்ளன.

இந்தியா ஒரு தேசம் தான் என்ற அடிப்படையோடு இந்துத்துவமும் தன் ஆக்டோபசுக் கரங்களை எல்லா திசைகளிலும் பரப்பி வருகிறது. ஆசிரியர் சமூகம் உட்பட படித்த நடுத்தர வர்க்கம் நுகர்வு வெறிக்கு ஆட்பட்டு இன்னும், இன்னும் தேவை என்ற முறையில்தான் செயற்பட்டு வருகிறது. இவற்றோடு பத்திரிக்கைகள், தொலைக்காட்சிகள் முதலியவற்றின் மூலம் விளம்பர சாதனங்கள் செய்யும் கவர்ச்சிகரமான பரப்புரைகளையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

மக்கள் மத்தியில் தமிழ்த்தேசிய உணர்வை நாம் வளர்த்தெடுக்க விரும்புகிறோம். இராணுவப் பெருக்கம் முதலியவற்றை நாம் ஏற்க முடியாது. அந்நியரின் ஊடுருவல்களையும் சீர்கெட்ட முதலாளிய நிறுவனங்க்ளின் பெருக்கத்தையும் நாம் மறுக்கத்தான் வேண்டும். கட்சிகள் செய்யும் ஊழல்கள் நமக்கு உடன்பாடாக இருக்கமுடியாது. நுகர்வு வெறியை நாம் ஒப்புக் கொள்ள முடியாது. இயற்கை வேளாண்மை, சூழல்காப்பு, பசுமை இயக்கம் ஆகியவற்றை நாம் வளர்த்தெடுக்க வேண்டும். நாளுக்கு நாள் பெருகிவரும் பொருளாதாரச் சுரண்டல் மற்றும் அரசு அதிகாரத்தின் ஒடுக்குமுறைகளின் விளைவாக பெண்கள் மீதும் பட்டியல் சாதியினர் மீதும் தொடர்ந்து சுரண்டலும் ஒடுக்குமுறையும் அதிகரிப்பதை நாம் ஏற்க முடியாது.

ஆங்கில ஆதிக்கமோ இந்தி ஆதிக்கமோ நமக்குத் தேவையில்லை. உழைக்கும் மக்களோடுதான் நமக்கு வாழ்வு என்பதாகத்தான் நம் நிலைப்பாடு இருக்கமுடியும். நம் மீது சுமத்தப்படும் அதிகாரம் டெல்லியிருந்து மட்டுமல்ல, வாசிங்டன்னிலிருந்தும் இலண்டனிலிருந்தும் மாசுகோவிலிருந்தும் டோக்கியோவிலிருந்தும் வருகிறது. சென்னை கூட

நம்மை அதிகாரம் செய்வதை ஏற்க முடியாது. நகரங்களின் தேவைக்காக கிராமங்கள் அழிய முடியாது. நடுத்தர வர்க்கத்தின் நுகர்வு வெறிக்காக நம் உழவர்களையோ கைவினைஞர்களையோ பலியிட முடியாது. அரசியல் கட்சிகளுக்குத் துதிபாடுவதன் மூலம் மக்கள் தன்மானத்தை இழக்க முடியாது. சமதருமம் தவிர வேறு பார்வை நமக்குத் தேவையில்லை. நாம் சார்ந்துள்ள எந்த வகை அமைப்பினுள்ளும் அதிகாரத்தை நாம் அனுமதிக்க இயலாது. தோழமை தவிர வேறுவகையில் ஆற்றலை நாம் பெருக்கமுடியாது.

மார்க்சியத்தினுள் வளர்ச்சி பெற்ற குறிப்பிடத்தக்கப் போக்கு ஒன்றை இங்கு குறிப்பிடுவது பொருந்தும். அன்றாட மார்க்சியம் (Day-to-day Marxism) என்பது இந்தப் போக்கு. லபார்க்கே என்ற பிரெஞ்சு மார்க்சியர் இந்தச் சிந்தனைப் போக்கைத் தோற்றுவித்தார். (இவர் மார்க்ஸின் மருமகன் என்று அறிகிறோம்) மார்க்சியத்திற்குப் பேருருவ அரசியல் தான் உண்டு என்று சிலர் குற்றம் சாட்டுவதற்கு மாறாக மார்க்சியத்திற்கு நுண்ணுருவ அரசியலும் உண்டு என்பதற்கு இந்தச் சிந்தனைப் போக்கு ஆதாரம்.

உலகளவில் வல்லரசுப் போக்கு முதலியவற்றை அழித்தொழிக்க வேண்டும் என்பது பேருருவ அரசியல். இது போதாது. வல்லரசியமோ முதலாளியமோ நம் அன்றாட வாழ்வியலுக்குள்ளும் ஊடுருவி நம்மை வசப்படுத்தி வைத்திருப்பதன் மூலமே அவை நமக்குள் வெற்றி பெறுகின்றன என்று சொல்லுவது அன்றாட மார்க்சியம்.

நாம் ஒவ்வொரு நாளும் என்ன உணவு உட்கொள்கிறோம். என்ன உடை தறிக்கிறோம்? நம் குழந்தைகளுக்கு எந்த மொழியைக் கற்பிக்கிறோம்? நமது பொழுதுபோக்கு என்ன? நமது திருமண முறை என்ன? எந்தவகை மருந்துகளை நாம் பயன்படுத்துகிறோம்? பெண்களோடு நமது உறவு எப்படி? நமது வீட்டின் அமைப்பு என்ன? நாம் தேர்ந்தெடுக்கும் போக்குவரத்துச் சாதனங்களின் தன்மை என்ன? நாம் எங்கெல்லாம் பயணம் செய்கிறோம்? நமக்கு மேல் உள்ளவர்களோடு அல்லது நமக்குக் கீழ் உள்ளவர்களோடு நாம் கொள்ளும் உறவு என்ன? நாம் படிக்கும் பத்திரிக்கை எது? நாம் கற்ற கல்வி எது? நாம் பயன்படுத்தும் கருவிகள் எத்தகையவை?

இப்படி ஒவ்வொரு நாளும் நூறு கேள்விகளோடு நாம் இயங்க



வேண்டும். நம் உணவு, உடை, கருவிகள் முதலியவற்றை யார் படைக்கிறார்கள்? என்ன தேவையோடு? இவற்றை நாம் பயன்படுத்துவதால் யாருக்கு நன்மை? இதனால் மக்கள் பயன்பெறுவார்களா? மக்கள் மீது அமர்ந்துள்ள ஆதிக்கவாதிகள் பயன்பெறுவார்களா? நாம் பயன்படுத்தும் கருவி. கல்வி, நாம் மேற்கொள்ளும் பழக்கவழக்கங்கள் முதலியவை மக்களின் விடுதலைக்கானவையா? அல்லது மக்கள் மீது அதிகாரத்தைத் திணிப்பவையா? நாம் எங்கு நிற்கிறோம்? யாரோடு நிற்கிறோம்? உழைக்கும் மக்களோடா? ஆதிக்கம் செய்பவர்களோடா? நமக்குள் நாம் என்னவாக இருக்கிறோம்? நம்மை நாமே என்ன செய்து கொள்ள விரும்புகிறோம்? தமிழ் நிலத்தோடு, நீரோடு மக்களோடு நமக்கு என்ன உறவு? இப்படிச் செல்கிறது "அன்றாட மார்க்சியம்".

இப்பொழுது நாம் புரிந்துகொள்ள முடியும். நமக்கும் அன்றாடத் தமிழ்த்தேசியம் தேவை. நமது உணவு, உடை, கல்வி, மொழி, இதழ்கள், திரைப்படம் என்று தொடங்கி நம்மை நாமே விரிவான ஆய்வுக்கு உட்படுத்திக் கொள்ளலாம். நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக நமக்குள் சேர்ந்துள்ள அழுக்குகளை அசிங்கங்களை வெளியேற்றிக் கொள்வதற்கு இப்படி நாம் சிந்திக்க வேண்டும். சிந்தனை ஓரளவிற்கேனும் நம்மைப் புதிப்பிக்கும். நமக்குள் புத்துணர்வைத் தோற்றுவிக்கும். இது போதாது என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடியும். நம் வரலாற்றைத் தோண்டிப் பார்க்க வேண்டும். பல திசைகளில் பரந்து செல்லும் நம் உறவுகளை மறு ஆய்வுக்கு உட்படுத்த வேண்டும். இப்படித்தான் நம்மைப் பெற முடியும். நமக்கான முகம் எது என்று சிந்திக்கத் தொடங்கி அப்புறம் மெல்ல மெல்ல அதன் வடிவத்தை, குணங்களை நிர்ணயித்து, அப்புறம் இடிபாடுகளிலிருந்து அதை மீட்க போராட்டத்தில் ஈடுபட்டு பலரோடு கூடி போராடி நமக்குள்ளிருந்தும் வெளியேற்றி அப்புறம் பெறுவதுதான் நமக்குரிய தமிழ்த் தேசியத் திருமுகம் / தமிழனின் முகம்.

# 11. நானும் என் தமிழும்

நான் தமிழன். என் தாய்மொழி தமிழ் என்பதால் மட்டும் நான் தமிழனாகி விடவில்லை. வீட்டில் தெலுங்கோ கன்னடமோ பேசுகிறார்கள் என்பதற்காகத் தமிழகத்தில் வாழும் அவர்களைத் தெலுங்கர் என்றோ கன்னடர் என்றோ நான் கூற மாட்டேன். பள்ளியில் நான் தமிழில்தான் கற்றேன். தெருவிலும் ஊரிலும் என்னைப் போலத் தமிழ் பேசுபவர்களிடமிருந்தும் நான் தமிழ் கற்றேன். சமுதாயத்தில் உறவாட தமிழ்தான் என்மொழி. என்னோடு பேசுபவர்களும் என்னைப் போலத்தான் தமிழோடு உறவு கொண்டிருக்கிறார்கள். தமிழ்ச் சூழலில் இருந்துதான் நாம் அனைவரும் தமிழ் கற்கிறோம்.

தாயிடமிருந்து தமிழ் கற்கும்போதே அன்பையும் சேர்த்துத்தான் கற்கிறோம். சிறுவயதில் நண்பர்களோடு ஆடி, ஓடித் திரிகிற போது, நண்பர்களோடும் சூழலோடும் இணைந்து, தமிழ் கற்கிறோம். மண்ணில் புரண்டு விளையாடினோம். மரங்களில் ஏறிக் குதித்தோம். ஆறுகளிலும் குளங்களிலும் நீந்தினோம். வயல்வெளிகளிலும் வறண்ட நிலங்களிலும் சுற்றித் திரிந்தோம். இப்பொழுதெல்லாம் மண்ணோடும் மரங்களோடும், ஆற்றோடும், அருவிகளோடும், மலைகளோடும், பறவைகளோடும் உறவாடி நம் உயிர் இனிக்கத் தமிழ் கற்றோம். மரவகைகள், பயிர் வகைகள், வானம், சூரியன், சந்திரன் எல்லாவற்றோடும் நாம் உறவு கொண்டோம். எல்லாமே நம் நெஞ்சில் வந்து தங்கின. இவை இல்லாமல் நான் இல்லை. நாம் இல்லை. ஊரும் உறவுகளும் நம் நெஞ்சில் நிறைந்திருக்கின்றன. இவை எல்லாம் சேர்ந்துதான் என்னை ஆளாக்கின. என் ஆளுமைக்குள்ளிருந்து இவற்றில் எதனையும் என்னால் / நம்மால் பிரித்துப் பார்க்கவே முடியாது.

என் ஆளுமை மற்றும் கல்வி என்று சொல்லப்படுவதெல்லாம் எனக்குள் என்ன பொருளில் தங்கி உள்ளன? நான் யார் என்ற கேள்வி எழுப்பி என்னை நானே ஆய்வுக்குட்படுத்திக் கொள்கிறேன். என் பெற்றோர் இல்லாமல், ஆசிரியர்களில்லாமல், நண்பர்களில்லாமல் ஊரும் உறவுகளும் இல்லாமல் நான் இல்லை. இவர்களிடமிருந்து என்னைப் பிரித்துப் பார்ப்பது இவர்களுக்கு நான் செய்யும் அவமரியாதை மற்றும் எனக்கு நானே செய்து கொள்ளும் அவமரியாதை. நான் யார் என்னும் கேள்விக்குள் தொடர்ந்து செல்லும்போது என்னை உருவாக்கிய சக்திகள் என்று நான் எவற்றையெல்லாம் பட்டியலிட முடியும்?



நான் கிராமத்தில் பிறந்து வளர்ந்தேன். பல ஊர்களில் கல்வி கற்றேன். எத்தனை பேர்களோடு நான் உறவு கொண்டேன். எத்தனை பெரியவர்கள் மற்றும் அறிஞர்கள் எனக்குள் தங்கி இருக்கிறார்கள். என் அப்பாவுக்கு மட்டுமா நான் திதி செய்யவேண்டும்? எத்தனை கோடிப் பேரை வழிபட வேண்டும்? வானத்திற்கும் பூமிக்கும் எப்படி நன்றி சொல்ல முடியும்? நான் கண்டவை, கேட்டவை, படித்தவை, பழகியவை – எல்லாமே எனக்குள் இணைந்து இருக்கின்றன. இவை தமக்குள் உறவும் முரணும் உடையவை. நான் ஓயாமல் கேட்டிருக்கிறேன். இவற்றோடு எல்லாம் எனக்கென்ன உறவு? இவற்றின் இடையில் உள்ள முரண்கள் என்னைத் துன்புறுத்தின; காயப்படுத்தின. எல்லாவற்றையும் கேள்விக்குட்படுத்தினேன்.

மனிதன் எப்படித் தோன்றினான்? முதல் பிரபஞ்சம் எப்படி தோன்றியது? என்பது வரை எனக்குள் தொடர்ந்து கேள்விகள்! வரலாறு என்றால் என்ன? கடவுள் உண்டா? இல்லையா? உயிர் தனித்து இயங்குமா? இப்படி நூற்றுக்கணக்கான கேள்விகள்.

வயது ஏற ஏற, அறிவும் அனுபவங்களும் விரிய விரிய எத்தனையோ விடைகள்! வரலாறு எனக்குள் இயங்குகிறது. சமூகம் எனக்குள் இயங்குகிறது. இவையில்லாமல் நான் இல்லை. இவற்றோடு நான் இணைந்தும் முரண்பட்டும் இயங்குகிறேன். இப்படித்தான் எனக்குள் ஆளுமை பெற்றேன் மனிதனாகிறேன்.

நான் யார் என்ற கேள்வி எழுப்பி மதவாதிகளைப் போல ஆய்வு நடத்தி எல்லாவற்றிலிருந்தும் என்னைப் பிரித்துக் கொண்டு சென்று இறுதியில் நான் பிரம்மம் என்றோ எனக்குள் இருப்பது சூன்யம் / ஏதுமில்லை என்றோ என்னால் கூற முடியாது. வரலாற்றின் வழியே மண் முதல் வானம் வரை ஆதிவாசிகள் முதற்கொண்டு இன்றுவரையான மனிதன் வரை எத்தனையோவற்றோடு நான் கொண்ட உறவிலிருந்து தான் நான் உருவானேன்.

வரலாற்றுக்கு முற்பட்ட ஆதிவாசிகளும் வரலாற்றுக் காலத்தில் வந்த சமயவாதிகளும் கோடிக்கணக்கான உழைக்கும் மக்களும், தாவரங்களும் பறவைகளும் என்னோடு இன்னும் உறவு கொண்டிருக்கிறார்கள். இவற்றிலிருந்து ஒரு கலப்படமாகவோ ஒருங்கிணைவாகவோ நான் உருவாகியுள்ளேன். இப்பொழுது சொல்ல முடியும். நான் என்பது தனியனான நான் அல்ல. ஒட்டுமொத்தமான வரலாற்றின் சமுதாயத்தின் படைப்புகளில் நானும் ஒருவன்.

ஒருவகையில் திரும்பிப் பார்த்தால் எனக்குள் இந்த பிரபஞ்சம் இருக்கிறது. வரலாறு இருக்கிறது. எனக்குள்ளும் குருச்சேத்திரம் இருக்கிறது. அறத்திற்கும் மறத்திற்கும் இடையிலான போரில் நானும் ஈடுபட்டிருக்கிறேன். பகவத் கீதை சொல்லும் விசுவரூப தரிசனம் மார்க்சியனான எனக்கும் உரியதுதான். வரலாற்றில் எனக்கும் அழிவில்லை. என்னை யாரும் அழித்துவிட முடியாது. நானும் காலம் கடந்தவன். இப்படியெல்லாம் என்னாலும் வரலாற்றின் சாரத்தை உள்வாங்கிக் கொண்டு செல்ல முடியும்.

இப்பொழுது தொடக்கத்தில் எழுப்பிய கேள்விக்குத் திரும்புவோம்? நான் எப்படி தமிழனானேன்? தமிழ் கற்றுத் தரும்போதே எனக்கென என் தாய் அன்பைக் கற்றுக்கொடுத்தார். உயிர்களை நேசிக்கக் கற்றுக் கொடுத்தார். எல்லோரோடும் நல்லுறவு கொள்ள என் தந்தை கற்றுத்தந்தார். வயல்களையும் மண்ணையும் நேசிக்க கிராமத்து உழவர்கள் எனக்குக் கற்றுத்தந்தனர். நீரும், நிலமும் எனக்குள் நேசத்தைக் கற்றுத் தந்தன. ஆசிரியர்கள் எனக்கு வள்ளுவரையும் இளங்கோவையும் கற்றுத்தந்தனர். மொழி நம்மைக் கட்டமைக்கிறது என்று நண்பர்கள் சொல்லுகின்றனர். நெடுங்காலமாகத் தொடர்ந்து வரும் வரலாறும் பண்பாடும் நம்மைக் கட்டமைக்கின்றன.

என் தாயிலிருந்து தமிழை என்னால் பிரித்துப் பார்க்க இயலாது. எனக்குள் வந்து சேர்ந்த எத்தனையோ உறவுகளிலிருந்து என்னால் தமிழைப் பிரித்துப் பார்க்க இயலாது. தமிழ்தான் எனக்கு உயிரைத் தந்தது. உறவுகளைத் தந்தது. எனக்குள் வள்ளுவரும் இளங்கோவும் வாழ்கிறார்கள். எனக்குள் தேடிச் சென்றால் ஆழ்வார்களையும் நாயன்மார்களையும் காண இயலும். கணியன் பூங்குன்றனாரும் கபிலரும் பரணரும் எனக்குள் வாழ்கின்றார்கள். இவர்கள் வழியே நான் அன்பைச் செரித்துக் கொண்டேன். மனிதர்களையும் உயிர்களையும் மண்ணையும் நேசிக்கக் கற்றுக் கொண்டேன். இந்த நேசமில்லாமல் எனக்குள் உயிர்வாழ்க்கை இல்லை. உயிரியக்கம் இல்லை. வானமும் பூமியும் எனக்குள் வசப்பட்டிருக்கின்றன.

என் கிராமத்துப் பெரியவர்களுள் வள்ளுவரையும் சித்தர்களையும் நான் பார்க்கிறேன். இவர்கள்தான் தமிழ் மண்ணுக்கு உரமாகவும் உயிராகவும் இருக்கிறார்கள். உழவுத் தொழிலின் விளைச்சல் இந்தப் பெரியவர்கள். இயற்கை தரும் மாபெரும் விளைவை இவர்கள் மண்ணின் வழியே விளைச்சலாக நமக்குத் தந்தார்கள். இவர்கள் தம் உழைப்பின் விளைச்சலை நம்மோடு பகிர்ந்து கொண்டார்கள். இயற்கை இவர்களுக்குள் அன்பை விளைவித்திருக்கிறது. தாய் மட்டுமா என்னைப் படைத்தார்? இந்த உழவர்களும் உழைக்கும் மக்களும் மண்ணும் வானமும் என்னைப் படைத்திருக்கின்றன. இவர்களின் வழியே தான் நான் வாழ்கிறேன். இவர்கள் தம் வாழ்வியல் அனுபவங்களை எத்தனைக் கதைகளில் பழமொழிகளில் கலைகளில் தேக்கி வைத்திருக்கிறார்கள். இவர்கள் வழியே உலகளவில் நான் விரிகிறேன். இப்படித்தான் நான் மனிதனாக / தமிழனாக வாழ்கிறேன்.



இப்பொழுது நான் உறுதியாகச் சொல்வேன். நான் தமிழன். தமிழனாக இருப்பதால் மண்ணையும் மனிதர்களையும் உயிர்களையும் உலகையும் நான் நேசிக்கிறேன். இப்படித்தான் எனக்குள் தமிழுணர்வைப் பெறுகிறேன். தமிழகம் என் அன்னை நிலம். தமிழ் நிலத்தை, தமிழ் நிலத்தின் இயற்கை வளங்களை அழிப்பவர்கள் தமிழ் மக்களை, தமிழ் மக்களின் வாழ்வுக்கான ஆதாரங்களை அழிக்கிறார்கள். தமிழகத்தின் ஆறுகளை, காடுகளை அழிப்பவர்கள். தமிழனை, தமிழனின் வாழ்வியக்கத்தை, வரலாற்றின் வழியே தமிழன் தனக்குள் வளர்த்துக் கொண்ட ஆற்றலை அழிக்கிறார்கள்.

தமிழில் கல்வி வேண்டாம் என்றும் பலதுறை அறிவுத்திறன்களை கற்றுத்தரும் ஆற்றல் தமிழுக்கு இல்லை என்றும் சொல்பவர்கள் சிந்துசமவெளி நாகரிகம், சங்ககால மேன்மை, தமிழன் வளர்த்துள்ள கோவில் மற்றும் கட்டடக் கலைகளை அழிக்க விரும்புகிறவர்கள். தம் தற்காலத் தேவைகளுக்காக மதுக்கடைகள், ஆபாசத் திரைப்படங்கள் முதலியவற்றை ஊக்குவிப்பவர்கள், தமிழனின் அறஉணர்வு, மனநலம், மன உறுதி ஆகியவற்றை அழித்து ஊழலையே அரசியலாக்கிவிட்ட போக்கிரிகளுக்கு மற்றும் அந்நிய சக்திகளுக்குத் தமிழனை அடிமை ஆக்குபவர்கள். தமிழ் வேண்டாம் என்பவர்கள் வாழ்வுக்கு அன்பு வேண்டாம். இயற்கை வேண்டாம் என்பவர்கள்.

என்னைப் படைத்தவர்கள் என் கிராமத்து பெரியவர்கள், உழவர்கள், கைவினைஞர்கள். என் வாழ்வுக்கு அர்த்தம் கற்பித்தவர்கள். இவர்கள் தந்த அன்பின் வழியே தான் தமிழை நான் கற்றேன். தமிழுணர்வு பெற்றேன். இவர்களுக்குள் தமிழ் வரலாறு இணைந்திருக்கிறது. இவர்கள் வாழ்வுக்கு ஆதாரம் இந்த தமிழ்நிலம். தமிழ்நாட்டு இயற்கை. இவர்கள்

வாழ்வுக்கான ஆதாரங்களை அழித்தால் இவர்களின் வாழ்வியல் அழியும். இந்தச் சான்றோர்கள் அழிந்தால் இங்கு திருக்குறளுக்கு மரியாதை இராது. இவர்கள் அழியும் போது தமிழ் அழியும். அப்புறம் என் வாழ்வைப் பற்றிப் பேசுவதற்கு என்ன இருக்கிறது? நிலத்தோடும், நீரோடும், வரலாற்றோடும் வாழ்ந்த இவர்கள் தமிழர்கள். அசலான தமிழர்கள். இவர்கள் வாழ்வின் மீது தான் நம் அனைவரது வாழ்வும் அமைந்து இருக்கிறது.

இவர்களை அழித்தபிறகு நமக்கென வாழ்வு இல்லை. தமிழுக்குச் சொல்லப்படும் பெருமைகளெல்லாம் இவர்களை வைத்தே உருவானவை. இவர்கள் எல்லாவற்றையும் மற்றவரோடு நம்மோடு பகிர்ந்து கொண்டவர்கள். கடவுளர்களும், மன்னர்களும் இவர்களிடமிருந்தே தோன்றியவர்கள். இவர்களுக்கு சுரண்டல் தெரியாது. ஆனால் இவர்கள் மீதுதான் சுரண்டல் அமைப்பு கட்டப்படுகிறது. தம்மைத் தமிழர்கள் எனக்கூட இவர்கள் அறியமாட்டார்கள். ஆனால் இவர்கள் மகத்தான மனிதர்கள். தமிழர் பண்பாடு என்பதை இவர்களை வைத்துத்தான் பேசுகிறோம். இவர்களுக்கான நிலத்தையும், நீரையும், வாழ்க்கையையும் உறுதிப்படுத்துவதாக நாம் பேசும் அரசியலும், பொருளியலும் அமைய வேண்டும். நம் தமிழ் தேசத்தின் முதன்மைக் குடிமக்கள் இவர்கள்தான். இவர்களை வாழவைப்பதன் மூலம் நாம் வாழ்வோம்.

நான் தமிழன். தமிழுணர்வு கொண்டவன். பாரதிதாசனுக்கு தமிழ் எவ்வாறெல்லாம் பொருள்பட்டது என்பதை மீண்டும் ஒருமுறை இங்கு பார்த்துக் கொள்ளலாம். தமிழ் என்பதற்கு ஆயிரம் பொருள் கண்டவர். பாரதிதாசன். தமிழ் என்றால் அகம் தமிழென்றால் புறம். தமிழென்றால் அறம், வீரம். தமிழ் என்றால் கற்பு, கலை, இயற்கை. தமிழ் என்றால் தவம், அருள், தியாகம் இப்படி தமிழுக்குப் பொருள் கண்டவர் பாரதிதாசன். தமிழை அமிழ்தென்றும் உயிரென்றும் சொன்னவர் பாரதிதாசன்.

பாரதிதாசன் நெறியில் தமிழ் உணர்வு கொண்டவன் உழைக்கும் மக்களோடு ஒன்றி இருப்பான். தமிழ் மண்ணோடும் நீரோடும் நெருங்கி இருப்பான். தமிழ் மக்களையும் நிலங்களையும், முதலாளிய சக்திகளும் அந்நிய சக்திகளும் அபகரிப்பதை ஏற்கமாட்டான். தமிழன் தன்மானமுடையவன். ஊழல்களை ஒப்புக்கொள்ள மாட்டான். ஊழல் செய்யும் அரசியல்வாதிகளை ஏற்கமாட்டான்.

வரலாற்றின் நெருக்கடிகள் தமிழனை வரலாற்றுக்கு வெளியே



தள்ளுவதில், தமிழ் என்று பேசும் ஊழல் செய்யும் எத்தனையோ சக்திகள் இணைந்திருக்கின்றன. தமிழனுக்கு நாடு வேண்டும். விடுதலை வேண்டும். உலகிற்கும் தமிழ் வேண்டும். தமிழைக் தக்கவைப்பது தமிழ்த்தேசியம் என்ற அரசியல். இந்த அரசியலுக்கு ஆதாரம் தமிழ் மெய்யியல். பூங்குன்றன் முதல் வள்ளுவர் மற்றும் சித்தர்கள் வழியாக பாரதியார், பெரியார் மற்றும் பாரதிதாசன் ஆகியவர்களுக்குள் இயங்குவது இந்த தமிழ் மெய்யியல்.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பதன் மூலம் இயங்குவது இந்தத் தமிழ்மறை.

தமிழ் என்பது நம்மைப் பொருத்தவரை உலகை உள்வாங்கிக் கொள்கிற ஓர் ஊடகம் மட்டுமல்ல. நமக்குள் உயிரியக்கத்தைத் தோற்றுவித்த சக்தி தமிழ். இவ்வகையில் தமிழ் நம்மைப் படைத்தது / கட்டமைத்தது. வள்ளுவரும் இளங்கோவும் கற்றுத் தந்த அறம் என்பது அவர்கள் வழியே தமிழ் நிலம் தோற்றுவித்து வளர்த்த அறம். இயற்கையோடு ஒத்துவாழும் உழவர்கள் மற்றும் கைவினைஞர்கள் இயற்கையின் வழியே தமக்குள் செரித்துக் கொண்ட அறம். தாய் நம்மை கருவாகத் தாங்கி வளர்த்தெடுத்தபோது இந்த அறத்தைத்தான் கற்றுத்தந்தார். இந்த அறத்தின் கருவில் தங்கியுள்ளது சமதருமம். இந்தச் சமதருமத்தை மையமெனக் கொண்டது தமிழ் மெய்யியல். இந்த மெய்யியலை தனக்குள் தரிப்பவன் தமிழன்.

வானத்தையும் பூமியையும் தனக்குள் உயிராக நேசிப்பவன் இவன். தனக்கு மட்டும், தன் இனத்துக்கு மட்டும் வாழ்வு என இவனால் சொல்ல முடியாது. உலக நேயம் தமிழனின், தமிழுணர்வின் ஆதாரம். இனம், மொழி என்பதனுள் தமிழ் உணர்வு முடங்குவதில்லை. இயற்கை, மக்கள், விடுதலை, என்பனவற்றுக்குள் விரிவு பெறுவது தமிழுணர்வு. மக்களின் விடுதலைக்கெதிராகச் செயற்படும் சக்திகளை தமிழுணர்வு கொண்டவன் முற்றாக ஒழிக்கவே முனைவான். தொன்மையான வரலாறும் மேன்மையான பண்பாடும் உலகளவில் தமிழன் தன்னை விரித்துக் கொள்ளத் தூண்டுகின்றன. இவ்வகையில் தமிழ் என்பது ஒரு கருவி அல்ல. வெறும் ஊடகம் அல்ல. இது உயிர்ச்சக்தி. உலகை உய்விக்கும் சக்தி. விடுதலை உணர்விற்குள் திரண்டிருக்கும் சக்தி. நான் எப்படி, எவ்வகையில் தமிழனானேன் என்று தேடிச்செல்லும் போது நமக்குள் வாய்ப்பது இந்தப் பார்வை.

## 12. வேண்டும் தமிழுக்கு தமிழனுக்கு விடுதலை

தமிழ் அழியக்கூடாது. தமிழை அழிய விடக் கூடாது என்று நாம் நம்புகிறோம். தமிழினம் அழியக் கூடாது. தமிழ் வாழ்வு அழியக் கூடாது. தமிழ் வரலாறு அழிந்துவிடக் கூடாது என்றெல்லாம் நாம் விரும்புகிறோம். இதற்கான சூழல் இன்றுள்ளதா? இல்லையென்றால் நாம் என்ன செய்ய வேண்டும்? தமிழ் நமக்கு உயிர் என்கிறோம். உயிரை இழக்க நாம் விரும்புவோமா? தமிழாகிய உயிரைக் காப்பாற்ற நாம் என்ன செய்ய வேண்டும்?

தமிழ் அழிந்துவிடாது என்று சிலர் சொல்லுகிறார்கள். உண்மைதான். தமிழகத்தில் 6 கோடி மக்கள் இருக்கிறோம். ஆங்கிலத்தோடு தொடர்பு உடையவர். ஆங்கிலத்தால் தம்மை வாழ்வித்துக் கொள்ள முடியுமென்று நம்புகிறவர்கள். ஆங்கிலத்தை வைத்து வணிகம் செய்பவர்கள். ஆங்கில ஆதிக்கத்திற்கு தரகு மற்றும் கூலிகளாய் இருப்பவர்கள் – இவர்களின் தொகை என்னதான் உயர்த்திச் சொன்னாலும் 1 கோடிக்கு மேல் தேராது. மீதியுள்ள 5 கோடி பேரும் தமிழோடுதான் வாழவேண்டும். இவர்களில் ஒரு பகுதியினர் வீட்டில் தெலுங்கோ, கன்னடமோ, மலையாளமோ வேறு எந்த மொழியில் பேசினாலும் வெளியில் இவர்கள் தமிழோடுதான் வாழ்ந்தாக வேண்டும்.

இவர்களிலும் பள்ளிக் கல்வி பெறாதவர் மூன்றில் ஒரு பகுதியினர். தமிழை விட்டால் இவர்களுக்கு வேறு கதி இல்லை. பெண்களுக்கு, பட்டியல் சாதியினருக்கு ஆதிவாசிகளுக்கு அதிக எண்ணிக்கையில் கல்வி தரப்படவில்லை. இவர்களெல்லாம் தமிழை விட்டு நீங்கி விடவும் முடியாது.

இந்த 5 கோடி பேரும் மேலே உள்ள 1 கோடிப் பேருக்கு வாழ்நிலையில் தாழ்ந்தவர்கள். இவர்களில் பெரும்பகுதியினர் உழைக்கும் மக்கள். இவர்கள் தமிழில்தான் பேசுகிறார்கள். இவர்களுக்குத் தரப்பட்ட கல்வியின் தரம் பற்றிப் பெரிதாகப் பேச முடியாது. தமிழ் வரலாறு இவர்களுக்குத் தெரியாது. தமிழின் தொன்மை மற்றும் மேன்மைகள் இவர்களுக்குத் தெரியாது. இவர்கள் படிக்கும் ஒரு சில பத்திரிக்கைகள் மூலம் இவர்கள் இன்று உலகளவிலான அரசியல் மற்றும் பொருளியலை, உலகளவிலான அறிவியல் ஆக்கங்களைக் கற்க முடியாது. பத்திரிக்கைகள் மூலம் இவர்கள் பெரும் அரசியல் அறிவு இங்கு செயற்படும் ஆதிக்க அரசியலுக்கு இவர்களைச் சேவகம் செய்ய வைக்கின்றது. தமிழ்த்



திரைப்படங்கள் மூலம் இவர்கள் பெரும் அறிவோ, கலையுணர்வோ இவர்களின் வாழ்க்கையை மலினப்படுத்தவே செய்கிறது. நுகர்வு வெறிக்கு ஆளாக்கப்படும் இந்த மக்களுக்குத் தொல்காப்பியரையோ, திருவள்ளுவரையோ தெரிந்து கொள்ள இயலாது. வாழ்வியலில் விரிவு இவர்களுக்கு இல்லை. இந்த விரிவு அறிவுறுத்தப்படவோ, அனுமதிக்கப்படவோ இல்லை. எனினும் இவர்கள் மூலம் தான் தமிழ் இங்கு பேசப்படும்.

தமிழக அளவில் மட்டும் சுருங்கிவிட்டதாக, பெருமை அழிவதாகத்தான் இந்தத் தமிழ் இங்கு இருக்கும். இது கூலிகளின் தமிழ். இந்தத் தமிழ் இங்கு இருக்கும். இது கூலிகளின் தமிழ். இந்தத் தமிழ் உயர்வட்டாரங்களில் மதிக்கப் பெறுவதில்லை. • உலகாண்ட தமிழ் அல்ல இது. ஆதிக்கவாதிகளுக்கு கூலிகள் வேண்டும். ஆதிக்கம் செய்வதற்கு உகந்தது அந்நிய மொழி. கூலிகளுக்குத் தமிழ் இருந்தால் போதும்.

இந்த ஆதிக்கவாதிகள், இதுவரை தமிழை என்ன செய்தார்கள்? தமிழை இவர்கள் ஆட்சிமொழி ஆக்கவில்லை; கல்விமொழி ஆக்கவில்லை. அறிவியல் கல்விக்குத் தமிழ் பயன்படாது என்று சொல்லுபவர்கள் இவர்கள்தான். கல்வியை தனியார் துறைக்கு ஒப்படைப்பவர்கள் இவர்கள்தான். தனியார் மயப்படுத்தல் என்பதன் மூலம்தான் உலகம் உருப்படும் என்று தத்துவம் பேசுபவர்களும் இவர்கள்தான். தமிழை வைத்து இவர்கள் அரசியல் நடத்தினார்கள். தமிழை வைத்து இவர்கள் தமக்கு பெருமை தேடிக் கொண்டார்கள். கவியரங்குகள், பட்டிமண்டபங்கள், கோவில் திருவிழாக்கள் மூலம் தமிழை வளர்ப்பதாகச் சொல்லி தமிழை மலினப்படுத்தியவர்கள் இவர்கள்.

தமிழுக்கு இவர்கள் ஆக்கம் செய்யவில்லை. பள்ளிகளில் தமிழ் புறக்கணிக்கப்பட்டது. தொழில் மற்றும் மருத்துவ மேற்படிப்பிற்கான தேர்விற்கு தமிழில் பெறும் மதிப்பெண்கள் கணக்கில் கொள்ளப்படவில்லை. கல்வியை கணிதம் மற்றும் அறிவியல் மயப்படுத்தினார்கள். இலக்கியம், வரலாறு, சமூகவியல், முதலியவற்றைப் புறக்கணித்தார்கள். மனித மேன்மை என்பதை இவர்கள் புறக்கணித்தார்கள். உயர் கல்வியின் நோக்கம் பணம் மற்றும் பதவி என்றார்கள். இன்பம், பெருமை ஆகியவற்றைத் தான் வாழ்வின் நோக்கம் என்றார்கள். சுதந்திரம், சமத்துவம் ஆகியவற்றை இவர்கள் பொருட்படுத்தவில்லை. சமதருமம் இவர்களுக்குத் தேவையில்லை. இயற்கையோடு ஒத்து வாழ்தல் கலையுணர்வை வளர்த்துக் கொள்ளல் ஆகியவை இவர்களுக்குத் தேவையில்லை.

தொகுத்துச் சொன்னால் மனிதன், சமூகம், மனிதநேயம், வரலாறு, விடுதலை என்பனவெல்லாம் இவர்கள் தம் வாழ்க்கை எல்லைக்குள் அனுமதிக்கவில்லை.

தமிழிலக்கியம் இவர்களுக்கு வேண்டாம். நூலகங்களை இவர்கள் புறக்கணித்தார்கள். கலைகளையும் கைவினைஞர்களையும் இவர்கள் பொருட்படுத்தவில்லை. இவர்கள் பெரும் பகுதியினர் மத்தியதர வர்க்கத்தினர். இவர்களில் ஒரு பகுதியினர் இலக்கியவாதிகள். இவர்கள் தமிழில்தான் எழுதினர். எழுதுகின்றனர். குமுதம், குங்குமம் என்று வணிகப் பத்திரிக்கைகளோடு இவர்கள் வாழ்கிறார்கள். தமிழ்மரபு பற்றி இவர்களுக்கு எதுவும் தெரியாது. வரலாற்றில் தமிழனை எந்தச் சக்திகள் அழித்தன! என்பது குறித்து இவர்கள் தெரிந்து கொள்வதில்லை. இன்றும் தமிழனை அழிக்கும் சக்திகள் குறித்து இவர்கள் இலக்கியம் படைப்பதில்லை. தமிழ்க் கல்வியை இவர்கள் ஆதரித்து எழுதுவதில்லை. சந்தைப்பொருளாதாரம் தமிழ் மக்களின் நலன்களை அழிப்பது குறித்து இவர்களுக்கு அக்கறையில்லை. இயற்கை நாசமாவது குறித்துக் கூட இவர்கள் அக்கறை கொள்ளவில்லை. பரிசுகளுக்கும் பாராட்டுகளுக்கும் அலைகிறவர்கள் இவர்கள். தாங்களும் தமிழிலக்கியம் படைப்பதாக சொல்லிக் கொள்கிறார்கள். அரசியல்வாதிகளோடு இயன்றபொழுதெல்லாம் கைகோத்துக் கொள்ளும் இவர்களாலும் தமிழ் வளராது என்பது உண்மை.

தமிழை அரசியலாக்கி வைத்திருக்கும் இந்த சக்திகள் தமிழின் பெருமை சொல்லி வாழ்பவர்கள். உலகளவில் செவ்வியல் மொழிகளின் வரிசையில் சேர்வதற்கான எல்லா தகுதிகளையும் உடையது தமிழ்மொழி. இந்தியாவில் சமஸ்கிருத மொழி மட்டுமல்லாமல் உருது, பாரசீகம் ஆகிய மொழிகளைக் கூட செவ்வியல் மொழி என இந்திய அரசு ஒப்புக் கொள்கிறது. இவற்றின் ஆக்கத்திற்கு பரிசுகள் தருகிறது. பலகோடி ரூபாய் செலவளிக்கிறது. தமிழுக்கு இந்தத் தகுதியைப் பெற தமிழ் அரசியல்வாதிகள் முனைப்பு கொள்ளவில்லை. செவ்வியல்மொழி என தமிழ் மேன்மை பெறும்பொழுது உலகளவில் தமிழ் தனக்கான இடத்தைப் பெறும். பண்பாட்டு செழுமைமிக்க தமிழ்மொழி உலகளவிலான நாகரிகச் செழுமைக்குப் பெரிதும் பயன்படும். சந்தைப் பொருளாதாரம் உலகத்தை அழித்துவரும் இன்றையச் சூழலில் அழிவிலிருந்து உலகைக் காப்பாற்ற தமிழ் உதவும். வள்ளுவரும் இளங்கோவும் தமிழ்ச் சித்தர்களும் வாழ்வில் அறம் தழைக்க உதவுவார்கள். இதற்கான தகுதி தமிழுக்கு உண்டு. தமிழனுக்கென ஒரு தனிநாடு என்று நாம் பேசுவதற்கு இதுவும் ஒரு



காரணம். ஈழத்தமிழகத்தின் விடுதலையை நாம் வேண்டுவதும் இதற்காகத்தான். ஆதிக்கவாதிகளுக்கு தமிழ் மக்களை அடிமைப்படுத்தியவர்களை நாம் காய்வதும் இதற்காகத்தான்.

தமிழின் ஆக்கம் கருதி இவர்கள் செயற்படவில்லை என்பதை இன்னும் சொல்ல வேண்டும். பல்கலைக்கழகங்கள், தமிழாய்வு நிறுவனங்கள் என்று இங்கு எவ்வளவோ இருந்தாலும் தரமான தமிழாய்வுகள் இங்கு பெரும்பாலும் இல்லை. தமிழக அரசு தரும் விருதுகளும் பரிசுகளும் அவர்கள் சார்ந்திருக்கும் இயக்கத்தினருக்கே போய்ச் சேருகின்றன. நவீன தமிழ் இலக்கியத்திற்குத் தம் படைப்புகள் மூலம் ஆக்கம் தருபவர்களை அரசு கண்டு கொள்ளவில்லை. தமிழக அரசின் சார்பில் செயற்படும் பொதுநூலகம் குறித்து நாம் மரியாதையோடு சொல்வதற்கு எதுவுமில்லை.

மேலும் ஒன்றைச் சொல்லலாம், உலகில் தரமான இலக்கிய நூல்கள், அறிவு நூல்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட வேண்டும். இந்த முறையில்தான் நவீன கால மொழிகளில் ஒன்று என்ற தகுதியை தமிழ் பெற முடியும். 'தத்துவத்தின் கதை' என்ற வில்டியுரென்டின் எழுதிய நூல் தமிழில் மொழிபெயர்க்கப்படவில்லை. சேக்ஸ்பியர் குறித்து ஒரு தொகுப்பு நூல் தமிழில் இல்லை. இந்த வரிசையில் எத்தனையோ நூல்களை இங்கு குறிப்பிட முடியும். இவை இல்லாத தமிழை நாம் எப்படிக் கொண்டாட முடியும்? இதைச் செய்யாத பல்கலைக் கழகங்களையும், தமிழ் வளர்ச்சிக் கழகங்களையும் நாம் எவ்வாறு மதிக்க முடியும்?

தாய்த்தமிழ்ப் பள்ளிகள் தான் இன்று தமிழின் வளர்ச்சிக்கான நாற்றங்கால்கள். தமிழுணர்வை இந்தப் பள்ளிகள் மூலம் தான் இனி வளர்க்க முடியும். தமிழ்த் தேசியம் தான் இனி தமிழ் மக்களின் வாழ்வுக்கான அரசியலாக இருக்க முடியும். தமிழ் மக்களை முதன்மைப்படுத்தித்தான் நாம் எதையும் இனி சிந்திக்கமுடியும்.

வாழ்நிலையில் என்னதான் முன் குறிப்பிட்ட 5 கோடி மக்கள் தாழ்ந்திருந்தாலும் இவர்கள் தான் அசலான தமிழர்கள். உழவர்களாகவும் கைவினைஞர்களாகவும் உழைக்கும் இவர்களைக் கொண்டு தான் தமிழ் வரலாறு தமிழ் அரசியல் முதலியன இயங்குகின்றன. இவர்களுக்குத் தான் முதல் உரிமை உடையது இந்த தமிழ்த்தேசம். இவர்களிடமிருந்து தான் இந்த தேசத்தை அரசியல்வாதிகள் அபகரித்துக் கொண்டிருக்கிறார்கள்.

உழைப்பதிலும் பகிர்வதிலும் அயராதவர்கள் இந்தத் தமிழ் மக்கள். இவர்கள் இயற்கைக்கு நெருக்கமானவர்கள். இயற்கையை நேசிப்பவர்கள். வேளாண்மை, கட்டிடக்கலை முதலிய எத்தனையோ தொழில்களில் பல்லாயிரம் ஆண்டுகளாக சாதனை விளைவித்தவர்கள் இந்தத் தமிழ்மக்கள். இவர்கள் வாழ்வியலில் இருந்துதான் திருக்குறளும், சிலப்பதிகாரமும் தோன்றின. இவர்களில் இருந்துதான் சித்தர்கள் தோன்றினர். இவர்களைத் தொடர்ந்து அடிமைப்படுத்துவதன் மூலம் தான் ஆதிக்கங்கள் வளர்ச்சி பெற்றன. இன்றும் வளர்ச்சி பெறுகின்றன. எந்தவகை ஆதிக்கமும் இந்த மக்களின் வாழ்விற்கு எதிராகத்தான் செயற்பட்டன. இவர்களின் தமிழை, தமிழ் வாழ்வை அழிப்பதும் இந்த ஆதிக்கங்கள் தான். இவர்களை இன்று கூலிகளாக, அடிமைகளாக, நாகரிகம் அற்றவர்களாக, தாழ்ந்தவர்களாக, தாழ்த்தப்பட்டவர்களாக மாற்றியிருப்பது ஆதிக்கங்கள்தான். அரசியல் என்றும் பொருளியல் என்றும் நவீன தொழில் என்றும் நவீன நாகரிகம் என்றும் மதங்கள் என்றும் கட்சிகள் என்றும் பல்வகையான பெயர்களில் செயற்படும் ஆதிக்கங்கள்தான் தமிழ் மக்களை அழித்து வருகின்றன.

மைய அரசின் ஆதிக்கத்திற்கும் சீர் கெட்ட முதலாளியத்திற்கும் அந்நிய சக்திகளின் ஊடுருவலுக்கும் இடங்கொடுத்து தமிழகத்தில் செயற்படும் அரசியல் கட்சிகளையும் தமிழினத் தலைவர்களையும் இன்று நாம் பெருமைப்படுத்த முடியாது. தமிழ் மக்களை தொடர்ந்து அடிமைப்படுத்துபவர்கள் இவர்கள். இவர்களுக்கு ஆதிக்கங்கள் வேண்டும், ஆங்கிலம் வேண்டும், கூலிகள் வேண்டும், அடிமைகள் வேண்டும். இவர்கள் உருவாக்கும் கட்சிகளிலும் கூலிகளைத்தான் உருவாக்குகிறார்கள். தமிழ் மக்களைத் தொடர்ந்து கொள்ளையடிப்பதன் மூலம் தமிழ் மக்களை வறுமைக்கும் நோய் நொடிகளுக்கும் உள்ளாக்குபவர்கள் இவர்கள்தான். இவர்கள் தான் ஆங்கில ஆதிக்கத்திற்கு ஆதரவாக இருப்பவர்கள். இவர்கள் தான் தமிழை, தமிழ் நிலத்தை, இயற்கையை, மக்களின் தன்மானத்தை அழிப்பவர்கள். இவர்களிடம் இருந்துதான் தமிழ்த்தேசத்தை, தமிழ் வரலாற்றை தமிழ் வாழ்வை, தமிழை விடுவிக்க வேண்டும். தமிழை இப்படித்தான் இனி நம்மால் காப்பாற்ற முடியும். உழைக்கும் மக்கள் தான் இனி தமிழுக்கு உயிர் வழங்க வேண்டும். தமிழ் வாழ்வையும் விடுதலையையும் இனி பிரித்துப் பேச முடியாது. தமிழ்த் தேசியம் இன்றி தமிழுக்கு, தமிழனுக்கு விடுதலை இல்லை.



பின்இணைப்பு - 1

## ஞானி தீட்டிய தமிழர் முகம்

தமிழ்மணி (ஆவணி 99)

உண்மை முகத்தை மறந்து உருக்குலைந்த முகத்தை ஏற்றுக்கொண்டு வாழப் பழகிவிட்ட தமிழருக்கு ஆண்டாண்டுக் காலமாய்ச் சேர்த்துக் கொண்ட குப்பைகளை விலக்கி அடைய வேண்டிய முகத்தை அடையாளம் காட்டுவதாய் அமைந்தது 'எந்த முகத்தோடு இன்றையத் தமிழர்' என்ற ஞானியின் தொடர்.

"தமிழ்மொழி என்றும், இனம் என்றும் பேசுவதன் மூலம் தமிழ்த்தேசிய அரசியலைத் தமிழ் மக்களுக்குரிய அரசியலாக மாற்றிவிட முடியாது. இயற்கையென்றும், நிலம், நீர் என்றும், வேளாண்மை என்றும், மக்களுக்கான கல்வி என்றும், தமிழ் மக்களை நாம் நெருங்க முடியும். சந்தைப் பொருளாதாரத்தின் விளைவாக மக்கள் மீது குறிப்பாக உழவர்கள், கைவினைஞர்கள், பெண்கள், தலித்மக்கள் மீது சுரண்டலும் ஒடுக்குமுறையும் அதிகரிக்கும் என்ற உண்மையைச் சுட்டிக் காட்டுவதன் மூலமே இவர்களைத் தமிழ்த்தேசியம் என்ற அரசியலுக்குள் கொண்டு வரமுடியும்" என்று ஞானி அவர்களே குறிப்பிடுவதுபோல தமிழர் முகத்தின் பல பரிமாணங்களைத் தனது 12 கட்டுரைகளில் விளக்கியுள்ளார்.

சங்ககாலப் பெருமைகளைக் கண்மூடித்தனமாகப் பூதாகாரப்படுத்தும் திராவிட இயக்கங்களிலிருந்தும் விலகி நிற்கிறார் ஞானி. அதேபோல் வள்ளுவர், இளங்கோ முதலியவர்கள் அக்காலத்தில் ஆதிக்கக் கருத்தைத்தான் வெளிப்படுத்தினர். தமிழ்ப் பண்பாட்டு மேன்மை குறித்து இன்று பேசுவதில் பொருளில்லை. . . கிழக்குலகில் மார்க்சியத்திற்கு நிகரான வெளிச்சங்கள் இல்லை என்றெல்லாம் பேசும் மார்க்சியர்களிடமிருந்தும் மாறுபட்டு நிற்கிறார் இந்தத் தமிழ் மார்க்சியர்.

அம்பேத்கரின் ஆய்வு முடிவுகளைப் பயன்படுத்தி திராவிடர் இந்தியாவெங்கும் பரவியிருந்ததையும், சிந்துச் சமவெளி நாகரிகத்தின் மேன்மையையும், பாரி போன்ற வேளிர்களின் வள்ளல் தன்மையையும், வள்ளுவத்தின் அறத்தையும் சுட்டிக்காட்டி வரலாற்றில் தமிழரின் தனித்துவத்தை நிலைநாட்டுகின்றார். இலங்கியங்களை மார்க்சியப்

புரிதலோடு அணுகி தமிழ்ச்சமூகத்தின் கட்டமைப்பை விளக்கியுள்ளது இத்தொடருக்குச் சிறப்பு சேர்க்கின்றது.

தமிழ்த்தேசியச் சிந்தனையை வளர்த்தெடுத்ததில் திராவிட இயக்கத்தவரின் பங்களிப்பைப் போற்றும் ஞானி தமிழைச் சொல்லியும் தமிழனை அடிமைப்படுத்த முடியும் என்று எச்சரிக்கை செய்கின்றார் மேற்கத்திய நாகரிகத்தைப் பெருமளவிற்குத் திறனாய்வின்றித் தமிழினத் தலைவர்கள் ஏற்றுக் கொண்டு செய்த சேவகத்தால் பெரியாருக்கும் மார்க்சுக்கும் கூட இன்று புரோகிதர்கள் பெருகிவிட்டார்கள். பணமும், பதவியும் அதிகாரமும், கட்சியும்கூட இன்று கடவுளாகிவிட்டன. ஆங்கிலேயனும் அமெரிக்கனும் இன்று நமக்குள் உறுதியான பீடம்போட்டு அமர்ந்திருக்கின்றனர். நம் தலைவர்களும் நமக்குள் வழிபடு தெய்வங்களாகிவிட்டனர் என்று விவரிக்கின்றார்.

அகண்ட பாரதக் கனவில் வேகமாக வளர்ந்துவரும் வகுப்புவாத அபாயத்தை எதிர்கொள்ளும் வகையில் தமிழ்ச் சிந்தனைக்குள் கடவுளின் முகம் என்ற கட்டுரை அமைந்துள்ளது. திராவிட நாகரிகத்தின் உலகியல் சார்பையும் ஆரியத்தின் உலக மறுப்பையும் வேறுபடுத்தி சாதி, சமயம், சடங்கு முதலியவற்றை முற்றாக ஒதுக்கிய சித்தர் நெறியை தமிழ்ச்சிந்தனையின் மையமாகக் கொள்ள வேண்டும் என்கிறார். கடவுளையும் தோற்றுவித்தவன் மனிதன்தான் என்று மதத்தின் மனிதநலச் சார்பைத் தமிழ் மரபில் விளக்குகின்றார். இந்துத்துவத்திற்கு எதிராக நாம் அணிய வேண்டிய ஆயுதங்கள் இவையாக அவரது கருத்தில் நன்கு வெளிப்படுகிறது.

தமிழ் வரலாற்றில் சமதர்மச் சிந்தனைகளைக் கோடிட்டுக் காட்டி தமிழ்ச் சமூகத்தில் தனியுடைமை மற்றும் அரசதிகாரத்தைத் தீவிரப்படுத்த முனைந்த மூவேந்தருக்கு எதிராக ஒரு பெரும் கலகம் களப்பிரர் காலத்தில் நடந்திருக்க வேண்டும் என்று புதிய வெளிச்சத்தைத் தமிழ் வரலாற்றில் பாய்ச்சுகின்றார். களப்பிரர், சமணர், தொல்காப்பியர், திருவள்ளுவர், இளங்கோ இவர்களெல்லாம் தமிழ்ச் சமூகத்தைப் புதுப்பித்தவர்கள் என்கிறார். இவ்வாறு புதிய கோணத்தில் சிந்தித்து மேலும் ஆய்வுக்கான வழித்தடத்தை அமைக்கின்றார்.

சாதி உயிர்ப்பு நடைபெற்றுக் கொண்டிருக்கும் தருணத்தில் "சோசலிசம் இங்கு செயல்பட்டிருக்குமானால் தொழில்வளர்ச்சி இங்கு நேர்ந்து வேலை வாய்ப்புகள் பெருகியிருக்குமானால் சாதி என்ற பிசாசின்



கோரத்தாண்டவம் எழுந்திருக்க முடியாது" (சன 99, பக் 16) என்றும் சமதளத்தில்தான் எல்லோரும் பத்திரமாய் இருக்க முடியும். உச்சத்தில் இருப்பவர் ஆபத்தில் இருப்பவர் என்றும் எச்சரிக்கை செய்கின்றார்.

தமிழரின் முகத்தை மீட்டெடுக்கத் தமிழ்த்தேசியத்தை வளர்த்தெடுக்க வேண்டியதன் அவசியத்தைக் கடைசி நான்கு கட்டுரைகளில் விவரிக்கின்றார். தமிழ் மக்கள் மத்தியில் சாதி, மதம் பார்ப்பனியம் முதலியவற்றைக் கலைய வேண்டுமென்றால் தமிழ் மக்கள் தமக்கான அரசியல் அதிகாரத்தை முற்றாகப் பெறாமல் முடியாது என்கிற பெரியாரின் இறுதி வார்த்தைகளைச் சுட்டிக்காட்டி தேசிய இனத்திற்கான முதலாளிய வரையறைகளை மாற்றி சோசலிசத்தைக் கட்டமைக்க வேண்டியதன் அவசியத்தை உணர்த்துகின்றார். தமிழையும், தமிழனையும், தமிழினத் தலைவர்களிடமிருந்தும் எல்லா ஆதிக்கச் சக்திகளிடமிருந்தும் விடுவிக்க வேண்டும் என்கின்றார். எளிமையான தமிழ்நடையும் சிறிய சிறிய வாக்கிய அமைப்பும் வாசகர்களுக்கு ஆர்வத்தைத் தூண்டுகிறது. எளிமையாகப் புரியவைக்கின்றது. சொல்லப்பட்ட கருத்துக்களே பல்வேறு இடங்களில் திருப்பிச் சொல்லப்பட்டமை தவிர்க்கப்பட்டிருக்கலாம்.

மேலும் கீழ்க்கண்ட ஞானி அவர்களின் நிலைப்பாடுகளில் விளக்கம் தேவை :

1. இட ஒதுக்கீட்டின் வழியாக சாதி நிலைத்துவிடலாம். இட ஒதுக்கீட்டிற்கான காரணிகளில் பொருளாதார அடிப்படை ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். (சன 99, பக் 16)

2. ஒன்றுக்கு மேற்பட்ட தேசிய இனங்களைக் கொண்ட தேசம் எதுவும் இனி அமைதியாக இருக்க முடியாது. (மே 99, பக் 15) என்று கூறும் ஆசிரியர் தமிழ்த்தேசியம் என்ற உடனே தனி நாடென்றோ விடுதலையென்றோ பேச வேண்டியதில்லை. கூட்டாட்சி போதும் (ஏப்ரல் 99, பக் 19) என்றும் கூறுகின்றார். அமெரிக்கா போன்ற கூட்டாட்சித் தத்துவம் ஆசிரியர்க்கு ஏற்புடையதா? கூட்டாட்சி தன்னுரிமை தன்னாட்சி ஆகியவற்றுக்கிடையேயுள்ள நுட்பமான வேறுபாடுகளை விளக்குவது அவசியம். இல்லையேல் குழப்பமே மிஞ்சும்.

3. தமிழ்நாட்டில் கணனிப் புரட்சி நடந்து கொண்டிருக்கும் காலக் கட்டத்தில் மேற்கத்திய தொழில்நுட்ப எதிர்ப்பு. இயற்கை வேளாண்மை சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பு இவைகளை அதிகமாக வலியுறுத்துகின்றார். நவீனத் தொழில் நுட்பங்களை எந்த அளவிற்கு ஏற்றுக் கொள்வது. அவற்றை நாம் மட்டும் புறக்கணிப்பது என்பது சாத்தியமா என்பதை விளக்குதலும் அவசியம்.



## உழைக்கும் மக்களுக்கே முதல் மரியாதை

- ஞானி (புரட்டாசி 99)

தமிழனின் வரலாறும் வாழ்வும் குறித்து "எந்த முகத்தோடு இன்றையத் தமிழன்" என்ற தலைப்பில் நான் தொடர்ச்சியாக எழுதிய 12 கட்டுரைகளை இலட்சியப் போராளி வெளியிட்டதற்கு என் மனம் நிறைந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். எனது கட்டுரைகளின் கருத்துக்களைச் சிறப்பாகத் தொகுத்துத் தந்ததுடன் சில கேள்விகளையும் எழுப்பியதற்காக தமிழ்மணி அவர்களுக்கு என் நன்றிகள் உரியவை. இக்கேள்விகளுக்கு என் பதில்களைச் சுருக்கமாகக் கீழே தருகிறேன்.

1. இடஒதுக்கீடு சாதிய அமைப்பை நிரந்தரமாக்கி விடும் என்பது என் கருத்து மட்டுமல்ல. கவலையும்கூட. அறிஞர் பெருஞ்சித்திரனார் உடுமலையில் நிகழ்த்திய உரை ஒன்றில் இதே கருத்தை அழுத்தமாகக் கூறியிருந்தார். (இக்கருத்தை 'நிகழ்' இதழில் பதிவு செய்துள்ளேன். நம் தேர்தல் முறை சாதிய அமைப்பை வலுப்படுத்துகிறது. சீர்கெட்ட முதலாளியத்திற்கும் சாதி இல்லாமல் முடியாது. திராவிட இயக்கம் மட்டுமல்லாமல் பொதுவுடமை இயக்கத்தினுள்ளும் சாதியம் வேரோடித்தான் இருக்கிறது. கலப்புத் திருமணம் சாதி அமைப்பைத் தகர்க்க முடியாது. இவை பற்றியெல்லாம் நாம் அக்கறையோடு சிந்திக்கத்தான் வேண்டும். காலம் கடத்திப் பயனில்லை.

இட ஒதுக்கீட்டை நான் மறுக்கவில்லை. இடஒதுக்கீட்டின் மூலம் அரசுப் பதவியில் அமருபவர்களுக்கு இன்றியமையாத கடமை ஒன்று இருக்கிறது. இவர்களும் ஊழல்களுக்கு இடம் தருகிறார்கள். சாதாரண மக்களுக்கு இவர்கள் தேவையான உதவிகளை மரியாதையோடு செய்வதில்லை. இந்தப் போக்கு கூடாது என்பதை இடஒதுக்கீட்டுக்காகப் பரிந்துபேசும் அமைப்புகள் வற்புறுத்த வேண்டும். அரசுப் பதவியில் அமர்ந்த பிறகாவது தம் பணிகளை நல்ல முறையில் கற்றுக்கொள்ள வேண்டும். இப்படியெல்லாம் சொல்வதில் தவறு இல்லை என்றே நம்புகிறேன்.

2. இந்தியாவில் நடைபெறுவது கூட்டாட்சி அன்று. கூட்டாட்சியின் சில கூறுகள் அரசியலமைப்புச் சட்டத்தில் இருந்தபோதிலும் ஒற்றை ஆட்சிதான் இங்கு நடைபெறுகிறது. கூட்டணி ஆட்சி என்பது கூட்டாட்சி முறைக்குப் போய்ச் சேராது. இந்திய அரசியலமைப்புச் சட்டப்படி மைய அரசுக்குத்தான் பெரும்பகுதி அதிகாரங்கள். மாநில சுயாட்சி என்று சொல்லி இன்னும்

இரண்டொரு அதிகாரங்கள் வேண்டும் என்று கேட்டுப் பெறவும் முடியாது. விடுதலை என்றோ தனியாட்சி என்றோ சொல்லி இந்திய இராணுவத்தை எதிர்க்குமளவிற்கு இங்கு எந்த இயக்கமும் இல்லை. விடுதலை என்பது இன்றைய நிலையில் கனவாகத்தான் இருக்கிறது. இது ஒரு இன்பக்கனவு. விடுதலை தானே கிடைக்காது. ஒரு இலட்சம் பேராவது உயிர்துறக்க அணியமாக இருந்தால் நம் கனவு நிறைவேறலாம். அனைத்துலக நிலவரங்கள் என்றாவது பெருமளவு மாறும். கடுமையான போர் ஒன்றில் இந்தியா மாட்டிக் கொள்ளுமானால் நமக்கு விடுதலை எளிதாகக் கிட்டலாம். இதற்கும்கூட முன்தயாரிப்புகள் தேவை. இது குறித்து நமக்கு இன்று சிந்தனை இல்லை.

தன்னுரிமை என்பது சுயநிர்ணய உரிமை. விரும்பினால் பிரிந்து போகும் உரிமை. இந்த உரிமை சோவியத் யூனியன் அரசியலமைப்புச் சட்டத்தில் இருந்ததால் மக்கள் மத்தியில் ஒரு வாக்கெடுப்பிற்குப் பிறகு மாநிலங்கள் தனி அரசை அமைத்துக் கொள்வது அங்கு சாத்தியப்பட்டது. (இதைப்போன்ற ஓர் ஏற்பாட்டை இங்குள்ள பொதுவுடைமைக் கட்சிகள் அறவே விரும்பவில்லை என்பது வினோதம்) இந்திய அரசியலமைப்புச் சட்டம், மாநிலங்களின் சுயநிர்ணய உரிமையை ஏற்பதில்லை. இந்த உரிமை மாநிலங்களுக்குத் தேவை என்று நாம் வற்புறுத்துவதில் தொடங்கி மேலும் சில முயற்சிகளை நியாயமாகவே செய்யமுடியும்.

இதற்கான கருத்துரிமை நமக்கு உண்டு. தோழர் ஆனைமுத்து அவர்கள் இதுகுறித்து பல்லாண்டுகளாக அக்கறையோடு விவாதிக்கிறார். மாநிலத்தின் ஆட்சிமொழி அந்த மாநில எல்லைக்குள் இருக்கும் மைய அரசு அலுவலகங்களிலும் ஆட்சிமொழியாக இருக்கத்தான் வேண்டும். இப்படி ஒரு கோரிக்கையோடு கிளம்பினால் இந்திமொழியைத் தவிர வேறு மொழி வழங்கும் மாநிலங்கள் இக்கோரிக்கைக்கு உடன்படும். நாளடைவில் மைய அரசின் ஆட்சி மொழியாக மாநில மொழிகளும் ஏற்கப்படும். ஒவ்வொரு மாநிலமும் தனக்குரிய ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ் அலுவலர்களை தம் மாநிலத்திற்குள்ளிருந்தே தேர்வு செய்துகொள்ள முடியும். ஆளுநர் என்பவரும், அந்தந்த மாநிலத்தைச் சார்ந்தவராக இருக்க முடியும். இத்தகைய சிந்தனைகளோடு இந்தியாவிற்கென கூட்டாட்சிக் கோட்பாட்டோடு கூடிய அரசியலமைப்பு நகல் சட்டம் ஒன்றை நாம் தயாரித்து மக்களின் ஆய்வுக்காக முன் வைக்க வேண்டும். ஒரு 10 ஆண்டுகளுக்கு இடைவிடாது இந்த விவாதத்தைக் கொண்டு செல்ல வேண்டும். இப்படியெல்லாம் தோழர் ஆனைமுத்து வழி சொல்லுகிறார்.



தன்னுரிமை, அல்லது சுயநிர்ணய உரிமை என்பது இத்தகைய அரசியலமைப்பின் ஒரு கூறாக அமையும். இப்படி ஒரு சாத்தியப்பாடு நம் முன் இருக்கிறது. விடுதலைக்கான முயற்சி எதுவுமில்லாத நிலையில் கூட்டாட்சிக் கோட்பாட்டின் அடிப்படையிலான ஓர் அரசியலமைப்புச் சட்டத்திற்கு நாம் உரிமையோடு முயற்சி செய்யமுடியும். இதற்கான வாய்ப்பை நாம் தட்டிக் கழிக்க வேண்டியதில்லை. இதுவும் சாத்தியமில்லை என்ற நிலையில்தான் விடுதலைக்கான போர் தொடங்க வேண்டியுள்ளது (பெரியார் இப்படி ஒரு போரை விரும்பவில்லை) திராவிட இயக்கங்களில் இதற்கான திட்டம் இல்லை. (அரசைக்காட்டிலும் அதிக விசுவாசத்தோடு கழகங்களும் கம்யூனிஸ்டுக் கட்சிகளும் நடந்து கொள்கின்றன) குறைந்த அளவிற்கு இத்தகைய விவாதங்களைத் தமிழ்த்தேசிய இயக்கங்களாவது நமக்குள் விரிவாக நடத்த வேண்டும்.

3. தமிழ்நாட்டில் கணினிப்புரட்சி நடைபெற்றுக் கொண்டிருக்கிறதென்ற சூழலில் இயற்கை வேளாண்மை என்று கூறி நவீனத் தொழில் நுட்பங்களை நாம் மட்டும் எதிர்ப்பது சாத்தியமா என்றும் தமிழ்மணி அவர்கள் வினவுகிறார். தமிழ்நாட்டில் கணிணிப்புரட்சி ஆங்கிலத்தில் தான் நடந்து கொண்டிருக்கிறது. ஆங்கிலக்கல்வியின் அதிகாரம் அண்மையில் குறைந்து விடுமென்று கூற இயலவில்லை. நவீன அறிவியலில் தேர்ச்சி பெறும் நம் அறிவாளிகள் அமெரிக்காவிற்கோ ஐரோப்பாவிற்கோ கூலி அடிமைகளாகச் சென்று மேற்கத்தியரின் உலகலாவிய ஆதிக்கத்தை வலுப்படுத்தவே செய்கின்றனர். நவீன தொழில் நுட்பங்களோடும் அந்நிய நிறுவனங்களின் ஊடுருவலோடும் இங்கே பெருகிவரும் முதலாளியம் உழைக்கும் மக்கள் மீது சுரண்டலையும் ஒடுக்குமுறையையும் பலமடங்கு திணிப்பதை நாம் ஒவ்வொரு நாளும் பார்த்தும் அனுபவித்தும் வருகிறோம். 90 சதம் உள்ள உழைக்கும் மக்களின் வாழ்விற்கு ஆதாரமான நிலம், நீர், காடு, கடல் முதலிய இயற்கைச் சக்திகளைத் தம் வசப்படுத்திக் கொள்வதோடு இவற்றைத் தொடர்ந்து நாசப்படுத்தவும் செய்து வருகிறார்கள். அரசியல் கட்சிகள் அனைத்தும் இத்தகைய சக்திகளோடு ஒத்துழைப்பதில் எந்தத் தயக்கமும் கொள்வதில்லை. இந்நிலையில் நமக்கு முன் எழுந்துள்ள பெரும் கேள்வி – இந்தியா யாருடைய தேசம்? 90 சதத்திற்கு மேலுள்ள உழைக்கும் மக்களுக்கு இந்த தேசத்தின் அரசியலிலும் பொருளியலிலும் எத்தகைய பங்கு இருக்க வேண்டும்? யாரை, யார் ஆள்வது?

இந்தச் சிக்கலை வேறொரு கோணத்திலும் பார்க்கலாம். வளர்ச்சி என்பதைத் தீர்மானிக்கும் வரையறைகள் எவையாக இருக்க முடியும்? இதே

கேள்வியை நோபெல் பரிசு பெற்ற அமார்த்தியாசென் எழுப்பியபோது இங்குள்ள அரசியல்வாதிகளும் பொருளியல் அறிவாளிகளும் வெட்கம் கெட்டநிலையில் வாய்மூடி இருந்தனர். அனைத்து மக்களுக்கும் கல்வி, சுகாதாரம், நிலச்சீர்திருத்தம், பெண் உரிமை என்பனவற்றை உறுதிப்படுத்துவது தான் வளர்ச்சி என்றார் அமார்த்தியாசென். இவரைக் காட்டிலும் இன்னும் கூடுதலான தெளிவுடன் பல ஆண்டுகளாக நம்மவர் பேசி வருகின்றனர்.

உழைக்கும் மக்கள் அனைவரது வாழ்விற்குமான உணவு, உடை, இருப்பிடம், கல்வி, மருத்துவம், சுகாதாரம், தொழில்வாய்ப்பு, சுதந்திரம், கலை நுகர்விற்கான வாய்ப்பு முதலிய ஆதாரங்களை உறுதி செய்த பிறகு கணிணி என்றோ ஸ்கேன் என்றோ இணையம் என்றோ இவர்கள் பேசட்டும். இதற்குச் சாத்தியமே இல்லை. இந்த நிலையில்தான் அறிவியல் தொழில்நுட்பம் இல்லாமல் நாடு எப்படி முன்னேறும் என்று படித்த மூடர்கள் தந்திரமாய் நம்மைப் பார்த்துக் கேட்கிறார்கள். விமானங்களோ கணிணியோ, மருத்துவப்பெரும் சாதனங்களோ – இப்படி எத்தனையோ பெரிய அறிவியல் தொழில்நுட்பங்களும் முதலில் செல்வம், அதிகாரம் படைத்தவர்களுக்குத்தான் வாய்க்கின்றன. கடைக் கோடியிலுள்ள ஏழை மக்களுக்கு என்றாவது இவை கிடைக்குமா? தவிர இந்த நவீன வசதிகளைத் தொடர்ந்து செய்வதற்கும் பெரும் முதலாளிகளும் அரசியல்வாதிகளும் கோடிக்கணக்கான உழைக்கும் மக்களை இன்னும் இன்னும் கூடுதலான சுரண்டலுக்கு ஆட்படுத்தி அவர்களை ஒவ்வொருநாளும் கொன்றொழிக்கத்தானே செய்கிறார்கள். மனச்சாட்சியுள்ள அறிவாளிகளுக்கு இந்த உண்மை உறுத்த வேண்டாமா?

ஆகவே, நமக்குள் இப்பொழுதும் தெளிவு இல்லை. உழைக்கும் மக்களுக்குரியது இந்தத் தேசம். இதை நம்மிடமிருந்து எந்தப் பெயரில் எந்தச் சக்தியும் அபகரித்துக் கொள்வதை நாம் ஒப்புக்கொள்ள முடியாது. முதலாளிய, அசுர சக்திகளுக்கு நம்மை நாமே பலியிட்டுக் கொள்ள முடியாது. இயற்கை வேளாண்மை என்றும் இயற்கை மருத்துவம் என்றும் தாய்த்தமிழ்ப்பள்ளி என்றும் இப்பொழுதேனும் நாம் தொடங்கியாக வேண்டும். இந்தியாவின் விடுதலைக்கு இராட்டையை ஒரு சின்னம் என்று காந்தியார் கூறியதுபோல இவற்றிலிருந்து நாம் தொடங்குகிறோம். முதலாளிகளுக்காக நாம் பேச முடியாது. நடுத்தர மக்களுக்காகக் கூட நாம் இன்று பேச முடியாது. 90 கோடி உழைக்கும் மக்களுக்காகத்தான் நாம் பேச வேண்டும். இந்தியாவிற்குள் இருக்கும் வரை இப்படித்தான் பேச



முடியும். உழைக்கும் மக்களுக்குத் தான் நாம் முதல் மரியாதை தரவேண்டும். ஒரு மொழி பேசும் உழைக்கும் மக்கள் இன்னொரு மொழி பேசும் பிற உழைக்கும் மக்களை பிறர் அடிமைப்படுத்துவதைக் கூட அனுமதிக்க மாட்டார்கள். தமிழ் மக்களுக்குள்ளும் உழைக்கும் மக்களுக்கே நம் முதல் மரியாதை.

## பின்இணைப்பு - 2

ஈழத்தமிழர்கள் தமக்குரிய தாயகத்தை வென்றெடுப்பதற்காக ஒரு கடுமையான போராட்டத்தில் ஈடுபட்டுள்ளனர். இலங்கைத் தீவின் பூர்வீக மக்களான ஈழத்தமிழர்கள், சிறுபான்மையினர் என்றும் இரண்டாந்தரக் குடிமக்களென்றும் கருதப்படுவதோடு, அவர்களின் பொருளியல் உரிமையும் அரசியல் உரிமையும் மறுக்கப்பட்டு, இன்று வாழ்வுரிமைக்காக உயிரைக் கொடுத்துப் போராடுகின்றனர்.

இவர்களுக்குத் தேவையான உதவிகளையும் ஆதரவையும் தர இயலாத அவலநிலையில், இந்தியச் சூழலில் தமிழ் மக்களாகிய நாம் இருக்கின்றோம். தமிழ் இனம் என்ற ஒத்த உணர்வு காரணமாக நாம் துடிக்கின்றோம்; துயரப்படுத்துகின்றோம். 1983–ல் நகரத் தெருக்களில் இடம்கொள்ளாத அளவுக்குப் பேரெழுச்சியோடு ஊர்வலத்தில் கலந்துகொண்ட நாம், இன்று உள்ளத்தில் துயரோடு ஒதுங்கி, ஒடுங்கிக் கிடக்கிறோம். உயிர் பிழைக்க ஈழத்தமிழகம் விட்டுப் புலம்பெயர்ந்து பல்வேறு நாடுகளில் அகதிகளாய் வாழும் ஈழத்தமிழர் நிலை எண்ணி மனம் வெதும்புகிறோம். இந்தச் சூழலில் தமிழகத்தில் வாழும் நம்மவர் நிலை என்ன என்பதையும் எண்ணிப் பார்த்துக் கொள்கிறோம். தமிழக மக்களும் அகதி நிலைமைக்குத் தள்ளப்படும் சூழல் அதிகரித்து வருவதைப் பற்றிச் சிந்திக்க நம்மவர்களுக்கு இது ஒரு வாய்ப்பாக அமைகிறது.

சந்தைப் பொருளாதாரம், உலகமயமாக்கல், தாராள மயப்படுத்தல் என்ற பல்வேறு பெயர்களோடு உள்நாட்டு பெருமுதலாளிகளின் ஆதிக்கம் அதிகரித்து வருவதோடு இன்று அந்நிய நாடுகளின் ஆதிக்கத்திற்கு இந்தியாவை மையத்தில் உள்ள அரசு திறந்து விடுகிறது. இந்தப் போக்கைத் தடுத்துநிறுத்தும் சக்தி மாநில அரசுகளுக்கு இல்லை. முதலாளியத்தை தாராளமாக ஊக்குவித்தால் மட்டுமே, இந்திய மக்களுக்கு வாழ்க்கை மேம்படும் என்ற பிரச்சாரத்தோடு சோஷலிசத் திட்டங்கள்

அனைத்தையும் அரசு முற்றாகக் கைவிடுகிறது. பொதுத்துறை நிறுவனங்கள் தனியாருக்குத் தாரை வார்க்கப்படுகின்றன. முதலாளிய நிறுவனங்களுக்குப் பெருமளவில் வரிக்குறைப்பு, ஏற்றுமதி இறக்குமதிக்கான வாய்ப்புகள் முதலிய சலுகைகளைத் தாராளமாக நிதி அமைச்சர் தந்து கொண்டிருக்கிறார். அந்நிய மூலதனத்தை வருந்தி வருந்தி அழைப்பதற்காக வாஷிங்டன் முதலிய தலைநகரங்களுக்குத் தலைவர்கள் யாத்திரை மேற்கொள்கின்றனர்.

இந்தியாவில் மூலதனச் சக்திகள் மேலும் மேலும் வலுப்பெற்றால் ஒழியப் பொருளாதாரப் பெருக்கம் ஏற்படாது என்று சொல்லி, இந்திய மக்கள்மீது சுரண்டலையும் ஒடுக்குமுறையையும் உச்ச அளவில் திணித்து வருகிறார்கள். வங்கிகளை முதலாளிகள் தாராளமாகக் கொள்ளையடிக்கலாம். அரசியல்வாதிகளுக்குக் கொஞ்சம் கொள்ளையில் பகிர்ந்து தந்தால் போதும். அர்சத்மேத்தா போன்ற திமிங்கிலங்களுக்கு வங்கி அதிகாரிகள், வங்கிகளைத் தாராளமாகத் திறந்து விடுகிறார்கள். ரிசர்வ் வங்கிக்குத் தெரியாமல் இந்தக் கொள்ளைகள் நடந்திருக்க முடியாது. புற்றீசல்கள் போலப் பெருகிவரும் தனியார் நிதி நிறுவனங்கள், மக்களின் சேமிப்புக்களைக் கவர்ந்து திரட்டுவதில் முனைப்போடு ஈடுபட்டுள்ளன. அரசு மற்றும் ரிசர்வ் வங்கியின் பார்வைபடாமல் இத்தகைய செயல்கள் நடைபெற இயலாது. மக்களிடமிருந்து இப்படித் திரட்டப்பட்ட பெரும் செல்வம் முதலாளிகளிடம் மூலதனமாகக் குவிய வேண்டும் என்ற நோக்கம்தான், அரசு மற்றும் ரிசர்வ் வங்கியின் பாராமுகத்திற்குக் காரணம். (பங்கு) பத்திரச் சந்தைகளின் தீவிரமான முயற்சிகளையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

அந்நியச் சக்திகளோடு உள்நாட்டில் பெரும் முதலாளியச் சக்திகளும் தொடர்ந்து வலுப்பெறுவதன் விளைவாக, இங்கு என்னவெல்லாம் நடைபெறுகின்றன என்பதை நாம் தொகுத்துப் பார்க்க வேண்டும்.

தொழிலாளர்களின் உரிமைகள் பறிக்கப்படுகின்றன. வேலை வாய்ப்புகள் தொடர்ந்து குறைகின்றன. சோஷலிசத்திற்கு எதிரான உணர்வு வளர்க்கப்படுகின்றது. நிரந்தர தொழிலாளர்களுக்குப் பதிலாக அன்றாடக் கூலிகளுக்குத்தான் வாய்ப்புத் தரப்படுகிறது.

கிராமங்களில் புதிய வகைத் தொழில் முயற்சிகள் என்ற பெயரில், நிலமும் நீர்நிலைகளும் நாசமாக்கப்படுகின்றன. ஏற்கனவே பசுமைப்புரட்சி



என்ற பெயரால் இரசாயன உரங்களாலும் பூச்சிக்கொல்லிகளாலும் இயற்கை மட்டுமல்லாமல், கிராமத்து மக்களின் உடல் நலமும் பெருமளவு நாசமாகி வருவதை நாம் இன்று அனுபவபூர்வமாக அறிந்து வருகிறோம்.

மேற்கத்திய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்காகத் தேயிலை மற்றும் காப்பி உற்பத்தியைப் பெருக்கும் நோக்கில், மலைகள் தொடர்ந்து மொட்டையடிக்கப்படுகின்றன. தேக்குமர உற்பத்தி என்றும், பழத்தோட்டப் பெருக்கம் என்றும் இறால் பண்ணைகள் என்றும் சொல்லி சிறுநில உழவர்களிடமிருந்து நிலங்கள் பறிக்கப்படுகின்றன. நிலச்சீர்திருத்தச் சட்டம் புறக்கணிக்கப்படுகிறது. உழவர்கள் கூலிகளாகின்றனர். கூலி வேலையும் கிட்டாத நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். நாளடைவில் எல்லாமே ஏற்றுமதி என்ற பெயரில் வெளிநாடுகளுக்கு போய்விடும் நிலையில், உணவு முதலிய பொருள்களுக்கு இங்கு பஞ்சமேற்படுவது உறுதி. இடைத்தரகர்களும் முதலாளிகளும் கொழுத்துத் திரிவார்கள். இவர்களோடு அரசியல் கட்சிகள் கூட்டுச் சேர்ந்துகொள்ளும்.

இந்தியாவைப் பாதிக்கும் இத்தகைய போக்கு தமிழகத்திலும் பெருவாகப் பாதிக்கிறதைப் பார்க்கிறோம். ஏற்றுமதிக்காகவே தோல் பதனிடும் தொழிற்சாலைகளும், இறால் பண்ணைகளும், சாயப்பட்டறைகளும் செயல்படுகின்றன. இவை காரணமாகத் தமிழ் மக்ளின் வாழ்வுக்கு ஆதாரமான நிலங்களும் நீர்நிலைகளும் நிரந்தரமான நாசத்திற்குள்ளாகின்றன. நீதிமன்றங்களின் தலையீடு எவ்வளவு காலத்திற்கு நிலைக்கும் என்று உறுதியாகச் சொல்ல முடியாது. முதலாளிகளும் அரசியல்வாதிகளும் நீதிமன்றங்களின் செயல்பாட்டை சகித்துக் கொள்ள மாட்டார்கள். நாளடைவில் சட்டங்கள் தளர்த்தப்படலாம். உழவர்கள், தலித் மக்கள் மீது, நகர்ப்புறத்துச் தொழிற்சங்கங்கள் அக்கறை கொண்டு இருக்க முடியாது. முதலாளியத்தின் காரணமாக வேலை இழக்கும் தொழிலாளிகள், தன்மானத்தைக் காத்துக் கொள்ள முடியாது.

சந்தைப் பொருளாதாரத்தின் தீவிர போக்கின் விளைவாக நாளடைவில் தொழிலாளர்களும் விவசாயிகளும் தலித் மக்களும் வாழ்விற்கான ஆதாரங்களை இழந்து அடிமைப்படுவார்கள். பழங்குடிகளுக்கு வாழ்வுரிமை முற்றாக மறுக்கப்படும். பெண்கள் மீது அடிமைத்தனம் அதிகரிக்கும். ஏற்கனவே லாட்டரிச் சீட்டு, மதுபானம், ஆபாசத் திரைப்படங்கள் முதலிய நூற்றுக்கணக்கான அழிவுப் போக்குகளின் விளைவாக, தமிழ் மக்களின் வாழ்வு

மலினப்பட்டுவிட்டிருப்பதைப் பார்க்கிறோம். ஆடம்பரத்தோடு கூடிய வாழ்க்கை வசதிகள் நூற்றுக்கணக்கில் மக்கள் மத்தியில் கொட்டப்படும் இன்றைய நிலையில் இவற்றைப் பெறுவதற்காக மத்தியதர வர்க்கத்தினர் எதனையும் செய்யத் துணிவு பெறுகிறார்கள்.

அரசு அதிகாரிகள் மற்றும் அரசியல்வாதிகள் வாயிலாக மக்களைக் காக்கும் ஊழல் என்னும் நச்சுக் சக்தி தமிழ் மக்களின் வாழ்வில் எல்லா அற உணர்வுகளையும் அழித்துவருகிறது.

தனியாரிடம் தாரைவார்க்கப்பட்ட கல்வி நிறுவனங்கள் மூலம் ஆங்கில மோகம் வளர்க்கப்படுகிறது. தமிழும் தமிழ் உணர்வும் அழிக்கப்படுகின்றன. தமிழ் மக்களின் பொருளியலை இன்று நிர்ணயிப்பவர்களில் பெரும்பகுதியினர் அந்நிய மார்வாடிகள் ஒருபுறம். இவர்களோடு பன்னாட்டு நிறுவனங்கள், தமிகத்தில் தொழில் நிறுவனங்கள் பலவும் இவர்களின் கைகளுக்குப் போய்ச் சேர்கின்றன. ஏற்கனவே தேயிலை, காப்பித் தோட்டங்கள் பெரும் பகுதி இவர்கள் கைவசம். இத்தகைய போக்குத் தொடர்ந்து அதிகரிக்கிறது. காவிரி நமக்கில்லை. நெய்வேலி முதலிய மத்திய அரசுத் தொழில் நிறுவனங்களில் நமக்கு அதிகாரம் இல்லை. மின்சாரத்தைப் பிற மாநிலத்தினர் அபகரித்துக் கொள்கின்றனர். வீணாக மேற்குக் கடலில் போய்ச்சேரும் ஆறுகளை நாம் பயன்படுத்திக் கொள்ள முடியாது. பெருந்தொழிற்சாலைகள் நிலத்தடிநீரைக் காலிசெய்து வருகின்றன. இவர்களால் ஆறுகள் சாக்கடையாகின்றன. மக்களின் வாழ்வுரிமை தொடர்ந்து பறிக்கப்படுகிறது. தாப்பர், டியூபாண்ட் முதலிய அந்நிய நிறுவனங்களுக்குத் தமிழகம் திறந்துவிடப்படுகிறது. இயற்கையின்மீது பெருமுதலாளிகளுக்குத்தான் முற்றான உரிமை என்ற போக்கு உறுதிப்படுகிறது. இயற்கை மக்களுக்குச் சொந்தமில்லை, தவிர மக்களின் உழைப்புத்திறன் முதலியவையும் மூலதனத்திற்குச் சொந்தம். அதாவது மூலதனத்திற்கு அடிமைகள். தொகுத்துடச் சொல்வதானால் தமிழ்நாட்டில் தமிழ்மக்கள் தம் வாழ்வுக்கான ஆதாரங்களை, பொருளியலை, அரசியலைத் தொடர்ந்து இழந்து வருவதன் மூலம் தமிழ்நாட்டிலேயே அகதிகளாகி வருகிறார்கள். கர்நாடகத்திலிருந்தும், மும்பையிலிருந்தும் தமிழ்மக்கள் அவ்வப்பொழுது விரட்டப்படுவதில் வியப்பில்லை. தமிழன் தனக்குத் தொன்மை வரலாறு உண்டு, தனி நாகரிகம் உண்டு என்று பேசுவதை வடக்கத்தியர், ஆரியர், இந்தியர் ஒப்புக்கொள்வதில்லை. தமிழின் தனித்தன்மை இவர்களுக்குக் கசக்கிறது. தமிழை எங்கள்மீது திணிக்காதீர்கள் என்ற குரல் தமிழகத்திலிருந்தே



எழுகிறது. இந்திய அரசு தமிழ் மக்களின் தன்மான உணர்வை ஒடுக்குவதில் தொடர்ந்து வெற்றி பெற்று வருகிறது. இந்திமொழி இன்று எதிர்ப்பில்லாமல் தொடர்ந்து பரவிவருகிறது. திராவிட / தமிழர் இயக்கம் இந்துத்துவவாதிகளுக்கு எரிச்சல் தருகிறது. கடவுள் மறுப்பு மதிக்கப்படுவதில்லை. மார்வாடிகளுக்கும் மற்றவர்களுக்கும் தொழில் நடத்துவதற்கு உகந்த அமைதியான மாநிலம் என்பதாக தமிழகம் இன்று இருக்கின்றது. தமிழகத்து அரசியல்வாதிகள் தம் நாற்காலிகளைக் காப்பாற்றிக் கொள்வதற்காகத் தமிழ் மக்களின் உரிமைகளை அரசிடம் விட்டுக் கொடுத்து விட்டார்கள். தமிழன் இன்று தன்மானம் அற்றவனாக, தன்னைத்தானே காத்துக் கொள்ள முடியாதவனாக இருக்கிறான். தமிழகத்திலேயே தமிழன் இன்று அகதியாகி வருகிறான்.

கர்நாடக அரசு காவிரியை நம்மோடு பகிர்ந்து கொள்ளாததற்கு இது காரணம். காவிரி இல்லையென்றால் தஞ்சைத் தரணியிலுள்ள தமிழ் மக்களின் வாழ்வென்னவாகும்? அரிசிக்காக ஆந்திரத்திடம் கையேந்தி நிற்கின்ற நிலையில், தமிழகத்தில் இன்னொரு தெலுங்கு தேசத்தை உருவாக்க முனைந்திருக்கும் அரசியல் சக்திகஒள நமக்கு எந்த ஆபத்தையும் விளைவிக்கலாம். தமிழகத்து மீனவர்களை இன்று நம்மால் காப்பாற்ற இயலவில்லை. கச்சத்தீவு நமக்குச் சொந்தமில்லை. சிங்கள அரசுக்கு, இந்திய அரசு தரும் இராணுவ உதவி முதலியவற்றை நம்மால் கேள்விக்கு உட்படுத்த இயலவில்லை. தமிழகத்தில் வாழும் ஈழத் தமிழ் அகதிகளுக்காக நம்மால் குரலெழுப்ப முடியவில்லை, போராலட இயலவில்லை. இப்படி நம்மைக் கையற்ற நிலைக்கு அரசியல்வாதிகள்தான் தள்ளியுள்ளனர்.

திரும்பச் சொல்வதானால், உலகளவில் மட்டுமல்லாமல் இந்தியாவினுள்ளும் தமிழகத்தினுள்ளும் தமிழ் மக்களாகிய நாம் அகதிகளாகி வருகிறோம். இதனால் தான் ஈழத்தமிழர்களின் வாழ்வுரிமைக்காக, நாட்டுரிமைக்காக நம்மால் இயங்க முடியவில்லை. இப்பொழுதாவது நாம் இந்த உண்மையைப் புரிந்து கொள்ள வேண்டும். ஈழத்தமிழ் மக்களின் வாழ்வுரிமைக்குப் போராடி, நம்மால் நிலைநிறுத்த முடியாது என்ற நிலை வருமானால், தமிழகத்தினுள்ளும் நம் வாழ்வுரிமையை நம்மால் தக்க வைத்துக் கொள்ள முடியாது. இப்படி ஒரு நிலை நேருமானால் வரலாற்றிலிருந்து நாம் வெளியேற்றப்படுவோம். அதன்பிறகு தமிழை அருங்காட்சியகத்தில்தான் காணமுடியும். வரலாற்றில் நமக்கு நேர்ந்துள்ள இந்தப் பேராபத்தை உணர்ந்து நாம் செயல்பட வேண்டும்.

பி.கு.

தமிழ்மணி அவர்களுக்கு 'இலட்சியப் போராளி' இதழில் நான் தந்த பதிலோடு மேலும் சேர்த்துக்கொள்ள வேண்டிய சில குறிப்புகள் :

1. இட ஒதுக்கீடு, சாதியை நிலைநிறுத்தும். சாதி ஒழிய வேண்டுமென்றால் இடஒதுக்கீட்டை மறுக்கத்தான் வேண்டும். ஒதுக்கீட்டின் வாய்ப்புக்களை பயன்படுத்திக் கொள்ளும் சமூகப் பிரிவினர்தான் இதை விரும்பிச் செய்ய வேண்டும். இட ஒதுக்கீட்டிற்கான தகுதிக்கு பொருளியல் காரணியைச் சேர்க்கக்கூடாது என்று சிலர் விவாதிக்கின்றனர். ஏற்கனவே இடஒதுக்கீடு காரணமாக அரசுப் பணியில் உயர்பதிவு பெற்றவர்களுக்கே இந்தச் சலுகை மேலும் மேலும் போய்ச் சேருகிறது. கிரீமிலேயர் என்று சொல்லப்படும் இவர்களால் அந்தக் குறிப்பிட்ட சமூகப்பிரிவின் அடித்தட்டிலுள்ளவர்களுக்கு பாதகம் ஏற்படத்தான் செய்கிறது. தவிரவும் இட ஒதுக்கீடு முதலாளியத்தையும் அரசு அதிகாரத்தையும் வலுப்படுத்தும். சாதி ஒழிப்பு சமதர்மத்திற்கு வழி திறக்கும்.

2. கூட்டாட்சி போதுமென்பது என் கருத்து இல்லை. உண்மையான / சரியான கூட்டாட்சி என்ற கோட்பாட்டின் அடிப்படையில் இன்னொரு அரசியல் அமைப்புச் சட்டம் தேவையென்பது என் கருத்து. சரியான கூட்டாட்சி என்பது மையத்தில் மட்டுமல்ல, மாநில அரசமைப்பினுள்ளும் பின்னர் இறுதியாக உள்ளாட்சி அமைப்பினுள்ளும் பெருத்த மாற்றங்களைக் கோரக்கூடியதாக இருக்கும். குடும்பம் உட்பட எல்லா நிறுவனங்களுக்குள்ளும் சமத்துவத்தை வற்புறுத்தும். இறுதியில் சோசலிசம் இவற்றிற்குள் வந்துசேரும். அமெரிக்கா என்றவுடன் உலகளவிலான அதன் ஆதிக்கம்தான் நம் கண் முன் வருகிறது. அமெரிக்காவின் உள் அமைப்புக்களில் செயல்படுகிற மக்கள் நாயகத்தை நாம் வரவேற்கத்தான் வேண்டும். இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் வழங்கும் பல்வேறு உரிமைகளைத் தட்டிக் கேட்கும் திறனை நாம் இழந்துவிட்டோம் என்பதையும் இங்கு கவனத்தில் கொள்ள வேண்டும். மைய அரசுக்கு மூன்று அல்லது மேலும் சில அதிகாரங்களுக்குமேல் இருக்கவே கூடாது என்ற முறையில் இன்றுவரை உலகில் எந்தக் கூட்டாட்சி அமைப்பும் இல்லை. இவை தவிர மேலும் ஒரு கருத்து. இந்தியாவின் அரசியல் அமைப்பு குறித்து ஒரு மறுபார்வை தேவை என்று இன்று பலரும் கூறுகிறார்கள். இந்நிலையில் எத்தகைய அரசியல் அமைப்பு தேவையென்ற விவாதத்தில் நம் தரப்பை விரிவாக எடுத்துரைக்க வேண்டும். இப்படியெல்லாம் செய்வதன் நோக்கம் விடுதலைக்கான சக்திகள் திரளாத நிலையில் நம் மக்களை குறிப்பாக இளைஞர்களை சரியான அரசியல் மயப்படுத்துவதற்கு சரியான கூட்டாட்சி குறித்து விவாதங்கள் பெருமளவில் பயன்படும். விடுதலைப் பற்றி பேசுவதற்கும் இந்தச் சரியான கூட்டாட்சி பற்றிய விவாதம் வழிதிறந்து வைக்கும்.



3. அனைத்து மக்களுக்கும் வாழ்வியல் வசதிகளை / வாய்ப்புக்களை உறுதிப்படுத்தியபிறகு கணினியென்றும் ஸ்கேன் என்றும் அரசும் முதலாளியமும் பேசட்டும் என்பது ஒரு வகைத் தர்க்கம். இப்படி அரசோ முதலாளியமோ செய்யப் போவதில்லை. இந்த நவீன தொழில்நுட்பங்கள் இல்லாமல், பெரும்பான்மையான மக்களுக்குத் தேவைப்படும் வசதி வாய்ப்புக்களை ஏற்படுத்த முடியாது என்பது முதலாளிகளின் தர்க்கம். இது முதலாளிய தர்க்கம். 15 / 20 சதம் மக்களுக்கு வசதி வாய்ப்புக்களை பெருக்குவதற்காகவே 80 சதம் மக்களுக்கான வாழ்வியல் ஆதாரங்கள் அழிக்கப்படுகின்றன. இந்த அழிப்பு வேலைக்குத்தான் நவீன தொழில்நுட்பங்கள் பயன்படுத்தப்படுகின்றன. முதலாளிய தர்க்கம் 80 சதம் மக்களின் அழிவுக்கே வழிகோலும். முதலாளிகளின் தர்க்கத்தை உள்வாங்கிக்கொண்டு நடுத்தர வர்க்கப் படிப்பாளிகள் திரும்பச் சொல்கின்றனர். முதலாளியத்தை மேலும் வலுப்படுத்துவதன் மூலம் உழைக்கும் மக்களை நடுத்தர மக்கள் இவ்வாறு நாசமாக்குகிறார்கள்.

4. மேலும் ஒன்றைச் சேர்த்துச் சொல்லலாம் முதலாளியத்தை உள்வாங்கிக் கொண்ட பெரியாரியமும் அதேபோல் மார்க்சியமும் மக்களுக்கு விடுதலை தராது. மக்களை சோசலிசத்திற்குள் இட்டுச் செல்லாது சாதி எதிர்ப்பு, மத எதிர்ப்பு, பார்ப்பனிய எதிர்ப்பு என்ற அளவில் குறுக்கப்படும் பெரியாரியமும் முதலாளிய எல்லைக்குள்தான் சுற்றிவரும். இப்போக்கு பெரியாரியத்தினுள் செயல்படும் வலதுசாரிப் போக்கு. ஆசிரியர் வீரமணி முதலியவர்கள் இந்த வலதுசாரி போக்கைத்தான் வெளிப்படுத்துகிறார்கள். சமதர்மத்தை மையப்படுத்தும் பெரியாரியம்தான் மார்க்சியத்தோடு ஒத்துச் செல்லும். இப்போக்கு பெரியாரியத்தின் இடதுசாரிப் போக்கு. முதலாளியத்திற்கு முற்றாகத்தம்மை பலியாக்கிக் கொண்டவர்களை பெரியாரியர் என்று சொல்வதில் பொருளில்லை. அதுபோல முதலாளியத்திற்கு தம்மை விற்றுக் கொண்டவர்களை மார்க்சியர் என்றும் அழைக்கமுடியாது.

என்று தணியும் இந்த சுதந்திர தாகம்
என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்

- பாரதி

எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு

- பாரதிதாசன்

## நிகழ் வெளியீடு 15

என் தாயிலிருந்து தமிழை என்னால் பிரித்துப் பார்க்க இயலாது. எனக்குள் வந்து சேர்ந்த எத்தனையோ உறவுகளிலிருந்து என்னால் தமிழைப் பிரித்துப் பார்க்க இயலாது. தமிழ்தான் எனக்கு உயிரைத் தந்தது. உறவுகளைத் தந்தது. எனக்குள் வள்ளுவரும் இளங்கோவும் வாழ்கிறார்கள். எனக்குள் தேடிச் சென்றால் ஆழ்வார்களையும் நாயன்மார்களையும் காண இயலும். கணியன் பூங்குன்றனாரும் கபிலரும் பரணரும் எனக்குள் வாழ்கின்றார்கள். இவர்கள் வழியே நான் அன்பைச் செரித்துக் கொண்டேன். மனிதர்களையும் உயிர்களையும் மண்ணையும் நேசிக்கக் கற்றுக் கொண்டேன். இந்த நேசமில்லாமல் எனக்குள் உயிர்வாழ்க்கை இல்லை. உயிரியக்கம் இல்லை. வானமும் பூமியும் எனக்குள் வசப்பட்டிருக்கின்றன.

என் கிராமத்துப் பெரியவர்களுள் வள்ளுவரையும் சித்தர்களையும் நான் பார்க்கிறேன். இவர்கள்தான் தமிழ் மண்ணுக்கு உரமாகவும் உயிராகவும் இருக்கிறார்கள். உழவுத் தொழிலின் விளைச்சல் இந்தப் பெரியவர்கள். இயற்கை தரும் மாபெரும் விளைவை இவர்கள் மண்ணின் வழியே விளைச்சலாக நமக்குத் தந்தார்கள். இவர்கள் தம் உழைப்பின் விளைச்சலை நம்மோடு பகிர்ந்து கொண்டார்கள். இயற்கை இவர்களுக்குள் அன்பை விளைவித்திருக்கிறது. தாய் மட்டுமா என்னைப் படைத்தார்? இந்த உழவர்களும் உழைக்கும் மக்களும் மண்ணும் வானமும் என்னைப் படைத்திருக்கின்றன. இவர்களின் வழியே தான் நான் வாழ்கிறேன். இவர்கள் தம் வாழ்வியல் அனுபவங்களை எத்தனைக் கதைகளில் பழமொழிகளில் கலைகளில் தேக்கி வைத்திருக்கிறார்கள். இவர்கள் வழியே உலகளவில் நான் விரிகிறேன். இப்படித்தான் நான் மனிதனாக / தமிழனாக வாழ்கிறேன்.

– ஞானி